

# கல்கி


1977 ஜனவரி 16
நள ௵
தை 3




## பொரு புதிர்!

4"X1½" நீள அகலமுள்ள நீள் சதுரத்தை எப்படி வேண்டுமானாலும் வெட்டலாம். ஆனால் இரண்டே துண்டுகளாக்க வேண்டும். பிறகு இரு துண்டுகளையும் வேறுவிதமாக இணைத்து 6" X 1" நீள அகலமுள்ள நீள சதுரமாக்க வேண்டும். முடியுமா?

-க. லக்ஷ்மணன்

விடை 46ம் பக்கம்





# முத்தான மோரிஷஸ்

■ பாய்மரப் படகில் பவனி வரப் புறப்படும் சுற்றுலாப் பயணிகள்.

■ தீவைச் சுற்றி அதிக ஆழமில்லாத அமைதியான கடலும் அதில் வாழும் உயிரினங்களும் வரவேற்பளிக்கின்றன.

சென்ற நூற்றாண்டிலே பாய்மரக் கப்பல்களிலே பயணப்பட்டு உலகம் முழுதும் சுற்றி, சுவை மிக்க கட்டுரைகளை எழுதிய மார்க் ட்வெயின் மோரிஷஸ் தீவில் 1896-ம் வருஷம் சில காலம் தங்கிய பிறகு தமது பிரமிப்பையும் மகிழ்ச்சியையும் எப்படித் தெரிவித்தார் தெரியுமா?

''கடவுள் முதலில் மோரிஷஸ் தீவை சிருஷ்டித்து, அதன் சௌந்தர்யத்தில் திருப்தியடைந்த பிறகு சுவர்க்கத்தை அதன்படியே நிர்மாணித்திருப்பார்!''

சுதந்திர தேசமான, மோரிஷஸ் இந்துமகா சமுத்திர த்திலே ஒரு முத்தாக ஜொலிக்கிறது. கோழி முட்டை போன்ற வடிவம்.

''கதிரொளியில் குளிக்கும் தீவு'' என இவ்வூர் மக்கள் பெருமையுடன் வர்ணிக்கிறார்கள். தமிழ்நாட்டின் ஒரு மாவட்ட அளவே உள்ள மோரிஷஸ் நாட்டின் ஜனத்தொகை எட்டரை லட்சம்தான். சென்னை நகரத்தின் ஜனத்தொகையில் மூன்றில் ஒரு பங்கே. இங்கு போய்வர வாய்ப்புக் கிட்டினால் ''கரும்பு தின்னக் கூலி வேண்டுமா?'' என்கிற அளவுக்கு மகிழ்ச்சியே உண்டாகும். அவ்வளவு இயற்கை அழகு. அதோடு கரும்புத் தோட்டங்களே இச்சிறிய நாட்டின் ஜீவநாடியாகும்!

இந்தியாவுக்கும், மோரிஷஸ் நாட்டுக்கும் சென்ற நூற்றாண்டிலிருந்தே மிக நெருங்கிய தொடர்பு உண்டு.

பிரஞ்சு ஆதிக்கத்திலிருந்த இது 1814-ம் வருஷம் பிரிட்டிஷ் காலனியாக மாறிற்று. கரும்புத் தோட்டங்களுக்கு மிகவும் ஏதுவான நிலவளமும், சீதோஷ்ண நிலையும் இருந்ததால் அவற்றில் வேலை செய்ய நம் நாட்டிலிருந்து 55 விவசாயத் தொழிலாளிகளை (பீகார் மாநிலத்தைச் சேர்ந்தவர்) வரவழைத்தனர். ஆனால் இன்றோ இந்நாட்டின் ஜனத்தொகையில் மூன்றில் இரண்டு பங்கு இந்திய பரம்பரையைச் சார்ந்தவர்கள்

■ உழைப்புக்குப் பின் உல்லாசம் — கரும்புத் தோட்டத் தொழிலாளர்கள்.






தாம்! எட்டு வருஷங்களுக்கு முன்பாக, 1968-ம் வருஷம் இந்நாடு பூரண சுதந்திரம் அடைந்ததிலிருந்து நம் இரு நாடுகளுக்குமிடையே பரஸ்பர நல்லுறவு மேலும் வளர்ந்து வருகிறது. மோரிஷஸ் பிரதம மந்திரி ஸர் ராமகூலம் அவர்களின் முன்னோர் பீகார் மாகாணத்திலிருந்து அங்கு போய்க் குடியேறிவர்களே. உதவிப் பிரதம மந்திரியும், நிதி மந்திரியுமான ஸர் ரிங்காடு (ரங்கசாமி நாயுடு அவருடைய மூதாதையர் குடும்பப் பெயராகும்!) ஆந்திர மாநிலத்திலிருந்து அங்கு போனவர்களின் வழித்தோன்றல். தமிழ் நாட்டிலிருந்து தென் ஆப்பிரிக்காவில் குடியேறி, மோரிஷஸ் நாட்டிலுள்ளவரை மணம் புரிந்து கொண்ட தமிழ்ப் பெண் ஸ்ரீமதி ஆர். பொன்னுஸ்வாமி மோரிஷஸ் நாட்டின் மந்திரி சபையில் ஒரு முக்கிய மந்திரியாவார். விருதுநகரிலிருந்து அறுபது வருஷங்களுக்கு முன்பு அங்கு குடியேறி வியாபாரத்தில் செழித்தோங்கும் செட்டியார் குடும்பத்தின் பிரமுகர் கணம் ஏ. கே. செட்டியார் இந்நாட்டின் எழுபது பேர் கொண்ட பார்லி

நிலே பறந்து, பிரயாணிகளுக்கு அறிமுகம் செய்து வைத்தார், அந்த விமானத் தளபதி.

இரண்டு விசேஷமான இயற்கை அம்சங்கள் இந்தச் சிறிய நாட்டில் இருப்பதை ஆகாயத்திலிருந்து பார்த்து உணர்ந்தோம். மிகவும் செழிப்பான தீவு. பச்சைப் பசேலென்று இயற்கை வளம். தீவைச் சுற்றிலும் அழகான கடற்கரைகள். தீவு முழுதும் எங்கு பார்த்தாலும் கற்குவியல்கள். நிலத்தை உழும்போது கற்களில் ஏர் அடிபடுமாம். உடனே அந்தக் கற்களை அவ்வயலின் ஒருபுறமுள்ள கற்குவியலில் சேர்த்து விடுவார்கள்! மோரிஷஸ் தீவு ஒரு லக்ஷம் வருஷங்களுக்கு முன்பாக, எரிமலை வெடித்ததன் விளைவாக உண்டாயிற்றாம். அதனால்தான் தீவு முழுதும் பல அளவுகளில் கற்களாம்!

சுற்றுலாப் பயணிகள்தாம், சர்க்கரைக்கு அடுத்தபடி இந்நாட்டின் வருமானத்துக்கு உதவுகின்றனர். இந்த அழகான தீவைச் சுற்றிலும் கடலுக்கடியில் பவழக் காடுகள் உள்ளதால் கடற்கரையை ஒட்டினாற் போல் ஆழமில்லாத நீர்த்தேக்கம் உள்ளது. ஆபத்தே

■ கதிரொளியில் குளிக்கும் நீலில் கடலலையில் நீந்த பின் ஓய்வெடுக்கும் சுற்றுலாப் பயணிகள்.





மெண்டின் முக்கிய அங்கத்தினராகச் சேவை செய்து வருகிறார்!

நம் நாட்டுக்கும் — மோரிஷஸ் நாட்டுக்கும் ஏற்பட்டுள்ள விசேஷ ஏற்பாட்டின்படி அங்கு போய்வர இந்தியப் பிரஜைகளுக்கு ரிஸர்வ் பாங்கியின் அனுமதியோ விஸாவோ தேவையில்லை. பம்பாயிலிருந்து மோரிஷஸுக்குப் போய்வரப் பிரயாணக் கட்டணம் ரூ. 5000. ஐந்து மணிநேர ஜெட் விமானப் பிரயாணம்.

மோரிஷஸ் நாட்டு மணிப்படி பகல் மூன்றரை மணிக்கு (நமது நாட்டுக்கும், அந்நாட்டுக்கும் ஒன்றரை மணி நேரம் வித்தியாசமுண்டு) விமானம் அங்கு இறங்க ஆரம்பித்தது. 30 மைல் நீளம் 25 மைல் அகலம் உள்ள இந்தத் தீவை நாலாயிரம் அடி உயரத்

யில்லாத கடற்கரையை ஒட்டிப் பச்சைப் பசேலென்று இயற்கை வளம். கடற்கரைகளில் மிகவும் நல்ல ஹோட்டல்கள் — இவையெல்லாம் சேர்ந்து உலகின் பல பாகங்களிலுமுள்ள உல்லாசப் பயணிகளை "வருக, வருக" என்று அழைக்கின்றன.

வருஷம் 365 நாட்களிலும் சுற்றுலாப் பயணிகள் வந்தவாறே இருக்கின்றனர். ஆண்டொன்றுக்கு ஒரு லட்சம் பேர் வருகின்றனர். அவர்களுக்குப் பிடித்தமான பலவித விளையாட்டுகள் கேளிக்கைகள் எல்லாம் இங்கு உண்டு.

பிரிட்டிஷ் ஆதிக்கத்துக்கு முன்பாகச் சுமார் நூறு வருஷ காலம் மோரிஷஸ் தீவு பிரஞ்சு ஆதிக்கத்துக்குட்பட்டிருந்தது. அதற்கு முன்



கல்கத்தா டெஸ்டில் முதல் நாள் ஸோல்கர் விளையாடும் பொழுது அவருக்கு பம்பர் போடப் பட்டது. அதை அடிக்க அவர் தடு மாறிய பொழுது அருகில் இருந்த டோனி கிரெய்க், அந்த மாதிரி பந்தை எப்படி அடிப்பது என்று சொல்லிக் கொடுத்தார். அடுத்த நாள் டோனி கிரெய்க் விளையாடும் பொழுது ஆப்ஸைடை நோக்கிப் பந்தை எப்படி அடிப்பது என்று அவருக்கு ஸோல்கர் சொல்லித் தந்தார்.

ஆமாம், இது என்ன டெஸ்ட் மேட்சா, நெட் பிராக்டீஸா?

- கே. சக்திவேல்

பாக முதல் எண்பது வருஷங்களுக்கு போர்ச்சு கீசிய ஆதிக்கத்திலும், பிறகு நூறு வருஷங் களுக்கு டச்சு ஆதிக்கத்திலும் இருந்தது. முதல் முதல் டச்சு ஆதிக்கம் ஏற்பட்டதி லிருந்து 1968-ம் வருஷம் சுதந்திரம் அடைந்த நாள் வரை 71 கவர்னர்கள் இங்கு ஆதிக்கம் செலுத்தி உள்ளார்கள்.

*18 டச்சு; 22 பிரஞ்சு; 31 பிரிட்டிஷ்!*

பூரண ஆதிக்கமும் அவர்களிடம் இருந்த தால் அவர்கள் தங்கள் தங்கள் மன நோக்குப் படி, இந்நாட்டின் பொருளாதாரத்தையும் கலாசாரத்தையும் வளர்த்தார்கள். இப்படி மாறுபட்ட கலாசாரங்களுக்கு உட்பட்ட தால், இந்த மோரிஷஸ் தீவில் ஐரோப்பிய ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளின் பல்வேறு மொழிகள், பழக்க வழக்கங்கள், மதச் சார்புகளின் சந்திப்பைக் காண்கிறோம். நம்ப முடியாத அளவுக்கு இந்நாட்டுப் பிரஜைகளில் ஐரோப்பிய, சீன, ஆப்பிரிக்க, இந்திய கலப்பு ஜாதியினரைக் காண்கிறோம். ஆறு லக்ஷம் இந்தியரில் ஒன்றரை லக்ஷம் பேர் முஸ்லிம்கள். கலப்பு மிகுந்த, ஆனால் பிரஞ்சு மொழியிலிருந்து உருவான க்ரியோல் பாஷையையே அநேகமாக எல்லோரும் பேசுகிறார்கள். ஆங்கிலம்தான் அரசாங்க மொழியானாலும், பிரஞ்சு பாஷையும் மிகவும் பரவலாகப் பேசப்படுகிறது. இந்தி யர்கள், ஹிந்தி, தமிழ், உருது பாஷைகளைப் பேசுகின்றனர்.

இந் நாட்டினரிடையே உண்மையான விருந்தோம்பல் பண்டைக் காண்கிறோம்

அழகான விமான நிலையம். வாரத்துக்கு நாற்பது சர்வதேச ஜெட் விமானங்கள் இங்கு வருகின்றன. 325 மைல் தொலைவிலுள்ள ''ரோட்ரிக்ஸ்'' தீவுக்கு வாரம் பலமுறை இந்நாட்டின் விமானம் போய் வருகிறது. இங்கிருந்து நூறு மைல் தள்ளி உள்ள பிரஞ் சுத் தீவான ''ரீயுனியனுக்கும்'' ஒவ்வொரு நாளும் இரண்டு முறை போய் வருகிறது.

மோரிஷஸ் தீவில் ரயில் கிடையாது. உள் நாட்டுப் பிரயாணமெல்லாம் காரிலோ, பஸ்ஸிலோ தான். சாலைகளை நன்றாக அமைத் திருக்கிறார்கள்.

விமான நிலையத்திலிருந்து நாங்கள் தங்கி யிருந்த பீச் ஹோட்டல் முப்பத்தெட்டு மைல் தூரத்தில் இருந்தது. ஒரு மணி நேரத்தில் ஹோட்டலுக்குப் போய்ச் சேர்ந்தோம். தீவின் ஒரு கடற்கரையிலிருந்து மற்றொருகடற் கரைக்கு அதன் மத்திய பாகத்தின் வழியா கப் போக வேண்டியிருந்ததால், அந்நாட்டை நன்றாகப் பார்க்க முடிந்தது. சாலையின் இரு புறமும் செழிப்பான கரும்புத் தோட் டங்கள். இரண்டு லக்ஷம் ஏக்கராவுக்கும் அதிகமான நிலப்பரப்பில் கரும்பு பயிரிடு கிறார்கள். ஜோசப் கான்ராட் என்னும் பிர சித்தி பெற்ற எழுத்தாளர் மோரிஷஸ் தீவைச் ''சர்க்கரையில் தோய்ந்த முத்து'' என்று வர்ணித்தார். மோரிஷஸ் தீவின் தொண்ணூறு சதவிகித வருமானம் சர்க்கரை ஏற்றுமதியி லிருந்தே வருகிறது. இருபத்தொரு நவீன சர்க்கரை ஆலைகள் உள்ளன. சுமார் ஏழு லக்ஷம் டன் சர்க்கரை உற்பத்தியாகித் தொண் ணூற்றைந்து சதவிகிதம் ஏற்றுமதியாகிறது. கரும்பு விளைச்சலும் ஏக்கரா ஒன்றுக்கு முப் பத்தைந்து டன்! கரும்புச் சக்கையை இந் நாட்டிலேயே ரம் தயாரிக்க உபயோகிக் கிறார்கள். 1973–74 வருஷங்களில் சர்வதேச மார்க்கெட்டுகளில் சர்க்கரை விலை ஒரேயடி யாக ஏறியபோது இந்நாட்டுக்குப் பேர திர்ஷ்டம் அடித்தது. பெரிய திட்டங்கள் போட்டு இந்நாட்டின் பொருளாதார – சமூக அபிவிருத்திக்கு வழி வகுத்துக் கொண் டார்கள்.

சர்க்கரைக்கு அடுத்தபடியாக இங்கு உற் பத்தியாவது தேயிலை. சுமார் பத்தாயிரம் ஏக்கராவில் பயிராகிறது. தேயிலை ஏற்றுமதி மூலமும் கணிசமான வருவாய் கிடைக்கிறது. உள்நாட்டுத் தேவைக்கு வேண்டிய அளவு புகையிலையும் பயிரிடுகிறார்கள். கொஞ்சம் காப்பியும் பயிரிடுகிறார்கள்.

பீச் ஹோட்டல், கடற்கரையில் விஸ்தார மாகக் கட்டப்பட்டு இருந்தது. நவீன குடி சைகள் பாணியில் நூறு தனித்தனி வீடுகள் கட்டப்பட்டிருந்தன. ஒவ்வொன்றிலும் எல்லா வசதிகளும்–குளிர்சாதன வசதி உள் பட–இருந்தன. ஒரே சமயத்தில் இரண்டா யிரம் வெளிநாட்டுப் பயணிகள் மோரிஷஸ் தீவில் தங்குவதற்கு நவீன ஹோட்டல்கள் உள்ளன. சென்னையில் கூட இந்த அளவுக்கு வசதியில்லை!

பிரதம மந்திரி ஸர் ராம்கூலம் தேசத் தந்தையாகப் போற்றப்படுகிறார். எழுபத் தைந்து வயதாகிய இவர் இந்நாட்டின் சுதந் திரத்துக்காக அயராது பாடுபட்டவர். 1968ம் வருஷத்திலிருந்து தொடர்ந்து பிரதமராக இருந்து வந்தாலும் இன்று வரை ''தாம்'' என்ற எண்ணமோ, நடத்தையோ இன்றி யாவருடனும் சகஜமாகப் பழகுகிறார். அவ ருக்கு உறுதுணையாக ஸர் கிங்காடு பணி யாற்றுகிறார்.

இந்நாட்டின் பொருளாதார அமைப்பைப் பற்றி நண்பர் ஸ்ரீ ராகவன் விவரமாகக் கூறினார். இந்நாட்டு நாணயமும் ரூபாய் தான். ஆனால் அதன் மதிப்பு நம் ரூபாயை விட இருபத்தைந்து சதவிகிதம் அதிகம்.

தொழில் வளம் பெருக வேண்டும். இதன் மூலமே இந்நாட்டின் வருங்காலச் சந்ததியாருக்கு நிறைய வேலை வாய்ப்புக்கள் ஏற்படமுடியும் என்பதை இந்நாட்டு அரசாங்கம் நன்றாக உணர்ந்து செயல்பட்டு வருகிறது. வெளிநாடுகளிலிருந்து இங்கு வந்து தொழில் நிறுவனங்களை அமைப்பதற்குப் பலவித சலுகைகளை அளிக்கிறார்கள். ஏற்றுமதி இறக்குமதி வரிகள் இல்லாத ஒரு தொழிற் பேட்டையை ஏற்படுத்தியிருக்கிறார்கள். வேலைவாய்ப்பு ஏற்படுத்திக் கொடுப்பதே இத்தொழிற் பேட்டையின் அடிப்படை நோக்கமாகும்.










இந்தியாவிலிருந்து சிலர் வந்து இங்கு தொழிற்சாலைகள் நிறுவியுள்ளனர். மேலும் நிறையத் தொழில் நிறுவனங்கள் பாரதத்திலிருந்து இங்கு வர வேண்டுமென இந்நாட்டு அரசாங்கமும், மக்களும் விரும்புகிறார்கள்.

அரிசி, துணிமணி முதல் எல்லா அடிப்படைத் தேவைப் பொருள்களும் இறக்குமதி மூலமே கிடைக்கின்றன. உலகின் எல்லா நாடுகளிலிருந்தும் போட்டி போட்டுக் கொண்டு இங்கு சாமான்கள் இறக்குமதியாகின்றன. இங்கு கிடைக்காத பொருள்களே இல்லை எனலாம். ஆனால் பொருளுக்குத் தகுந்தவாறு இறக்குமதி வரி இருப்பதால் ஹாங்காங் போலவோ சிங்கப்பூர் போலவோ வெகு மலிவான விலையில் சாமான்கள் கிடைப்பதில்லை.



மோரிஷஸ் நாடு காமன்வெல்த்தைச் சார்ந்திருக்கிறது. சர்க்கரைத் தொழிலும், மற்றும் வியாபாரமும் இந்நாட்டில் பிரஞ்சு ஆங்கிலேய பிரஜைகளிடம் அதிகமாக இருப்பதால் இங்கிலாந்து அரசியாரால் நியமனம் செய்யப்பட்ட ஓர் ஆங்கிலேயரையே இந்நாட்டின் கவர்னர் – ஜெனரலாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் எல்லா விஷயங்களிலும் சுதந்திர நாட்டினராகவே இயங்கி வருகிறார்கள்.

பாதுகாப்புக்காக இவர்கள் ஒன்றும் செலவிடுவதில்லை. தற்காப்பு அவசியம் இல்லை என்று நம்புகிறார்கள். இந்தியக் கடற்படை அல்லது இங்கிலாந்தின் கடற்படை என்றும் தங்கள் உதவிக்கு வரும் என்ற ஆழ்ந்த நம்பிக்கைதான் காரணம். தங்களுக்குள்ள சொற்ப வருமானத்தைப் பாதுகாப்பு முயற்சியில் விரயம் செய்யாமல் இருக்கிறார்கள்.

காந்தி மகான் 1901-ம் வருஷம் ஒருமுறை இந்நாட்டில் இரண்டு நாட்கள் தங்கினார். இந்தியாவிலிருந்து, தென் ஆப்பிரிக்காவிலுள்ள டர்பனுக்குக் கப்பலில் போகும்போது இங்கு தங்க நேரிட்டது. அவர் இங்குகாலடி வைத்ததை இன்றுவரை நினைவில் கொண்டு போற்றி வருகிறார்கள். இந்திய நிதி உதவியுடன் மாபெரும் காந்தி நிலையம் ஒன்றை நிறுவியிருக்கிறார்கள்.

மோரிஷஸ் தீவிலுள்ள காடுகள், மலைகள் நல்ல வளம் மிகுந்தவை. ஸாம்பார் வகை மான்கள் மட்டும் முப்பதாயிரம் இருக்கின்றன. ஆனால் வேட்டையாடுபவர்கள் வருஷத்துக்கு 2500 மான்களைக் கொன்று விடுவது கவலை தருகிறது. குரங்குகள், கீரிப்பிள்ளைகள், காட்டுப் பன்றிகள் எல்லாம் நிறைய உள்ளன. ஒன்பது விதமான விசேஷப் பறவை இனங்களும் இத்தீவில் உள்ளன. இவற்றில் இரண்டு வகை உலகிலே வேறு எங்குமே இல்லை!

மோரிஷஸ் தீவைச் சுற்றியுள்ள கடலில் மீன்வளம் மிகுதி. வருஷா வருஷம் பிப்ரவரி மாதத்தில் ஒரு சர்வதேச மீன் பிடிக்கும் போட்டி நடத்துகிறார்கள்!

போர்ட்லூயி மோரிஷஸ் நாட்டின் தலைநகர் மட்டுமல்ல; இந்துமகா சமுத்திரத்திலுள்ள மிகச் சிறந்த துறைமுகங்களில் ஒன்றாகப் போற்றப்படுகிறது. சுமார் இரு நூற்றி நாற்பது ஆண்டுகளுக்கு முன் இங்கு கவர்னராக இருந்த மஹே லபோர்டானெல் என்பவரால் நிர்மாணிக்கப்பட்ட அழகிய பட்டினம் போர்ட் லூயி. சர்க்கார் மாளிகை அப்போதே கட்டப்பட்டிருந்தும் இன்றும் அழகும் வலிவும் குறையாமல் போர்ட் லூயி நகரத்துக்குத் திலகம் வைத்தாற்போல் இருக்கிறது. பிரிட்டிஷ் ராணி விக்டோரியாவின் சிலை அதன் முன்பு அலங்காரமாக நிற்கிறது.

மோரிஷஸ் தீவைப் பதினேழாம் நூற்றாண்டில் தங்களது முக்கிய தளமாகக் கொள்ளைக் கூட்டத்தார் பயன்படுத்தியதாகவும் அதனால் இத்தீவில் நிறைய ஐசுவரியம் புதைக்கப்பட்டிருக்க வேண்டுமென்றும் பரவலாக ஓர் எண்ணம் இருந்து வருகிறது. ஆனால், இன்றுவரை பல பேர் பலவிதமாகத் தேடியும் ஒன்றும் கிடைக்கவில்லை. அதனால் ஒன்றும் குடிமுழுகிப் போய்விடவும் இல்லை. வேறு பல ஐசுவரியங்களை யாவருக்கும் அள்ளி அள்ளித் தருகிறது இத்தீவு.

இயற்கை அழகு. இனிப்பான சர்க்கரை மதுரமான தேநீர், மணக்கும் காப்பி இவற்றைவிடப் பெரிய ஐசுவரியங்கள் என்ன?

# எதிர்காலத்தை எண்ணுவோம்!

அரபு நாடுகள் எண்ணெய் விலையை எக்கச்சக்கமாக அதிகரித்த பின் பல்வேறு நாடுகளின் பொருளாதாரம் திக்குமுக்காடுகிறது.

நிலைமையைச் சமாளிக்க வேண்டிப் பல நாடுகள் புதிய எண்ணெய் வயல்களைக் கண்டு பிடிக்கப் பெருமுயற்சி செய்கின்றன. நிலத்தில் மட்டுமின்றிக் கடலிலும் தேடுகின்றன.

பிரிட்டன் வடக்குக் கடலில் எண்ணெய் உற்பத்தி ஆரம்பித்துள்ளது. வெகு சீக்கிரம் பிரிட்டன் பெட்ரோலியம் தயாரிப்பில் தன்னிறைவு பெற்று விடும் என்று நம்புகிறார்கள்.

அமெரிக்கா அலாஸ்காவில் கிடைக்கும் ஏராளமான எண்ணெயைக் கொண்டுவர, பல ஆயிரம் மைல்களுக்குப் பிரும்மாண்டமான குழாய்களை அமைக்கும் அசுர முயற்சியில் இறங்கியுள்ளது.

மலேஷியா போன்ற சிறிய நாடுகளும் எண்ணெய் கண்டுபிடிப்பதிலும் உற்பத்தியிலும் தீவிர கவனம் செலுத்துகின்றன.

இவையெல்லாம் மகிழ்ச்சி அளிப்பினும் மதப்பு நிலைக்கு நம்மைத் தள்ளிவிடக் கூடாது. நமது நோக்கு 1985 அல்லது 90 வரையில் மட்டுமல்ல, அதற்கு அப்பாலும் தீர்க்க தரிசனத்துடன் ஊடுருவ வேண்டும்.

தன்னிறைவு பெறும் நிலை நிச்சயம் வரும்; அதன் பிறகு மறுபடியும் தட்டுப்பாடு தொடங்கும்! ஏனெனில் உற்பத்தி பல துறைகளில் அதிகரிக்க அதிகரிக்க எண்ணெயின் தேவையும் அதிகரிக்கும். இந்த ரீதியில் இப்போது பூமி மட்டத்துக்கு அடியிலுள்ள எண்ணெய்ப் படுகைகள் வற்றிப் போக அதிக காலம் ஆகாது என்று விஞ்ஞானிகள் கருதுகிறார்கள்.

பாரதத்தில் நிலக்கரி தட்டுப்பாடின்றி நமக்கு இன்னும் நீண்ட காலத்துக்குக் கிடைக்கும்தான். ஆனால் நிலக்கரியைப் பயன்படுத்துவது சிரமம் என்பது மட்டுமின்றி, பயன்படுத்த முடியாத பல்வேறு தொழில் துறைகளும் உண்டு.


**கல்கி** மலர் 36 இதழ் 25





தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்


பாரதம் பின்தங்கி விடவில்லை என்பது பெருமைக்குரியது. சாகரத்தில் ஒரு சக்கரவர்த்தியையே — சாகர் சம்ராட் — சிருஷ்டித்துள்ளோம். பெட்ரோலியம் உற்பத்தியின் சரித்திரத்திலேயே ஒரு மாபெரும் வெற்றிக் கதையாக விளங்குகிறது இது. பம்பாயிலிருந்து சற்றுத் தள்ளி நடுக்கடலில் அமைந்துள்ள இந்த எண்ணெய்க் கிணற்றில் உற்பத்தி தொடங்கி விட்டது. பாரதத்தில் வேறு எங்கெங்கே எண்ணெய் கிடைக்கும் என்று எண்ணெய்-இயற்கை வாயு கமிஷன் கண்ணில் விளக்கெண்ணெயை விட்டுக் கொண்டு ஆராய்ந்து வருகிறது!

இதே நேரத்தில் பல்வேறு தொழிலகங்களில் எரிபொருளாகப் பெட்ரோலியம் எண்ணெய்க்குப் பதில் நிலக்கரியைப் பயன்படுத்த வேண்டும் என்று அரசு வற்புறுத்துவதுடன் அதிகாரிகளை அனுப்பி ஆக்கபூர்வமான யோசனைகளையும் கூறி வருகிறது.

1985வாக்கில் இந்தியா பெட்ரோலியம் உற்பத்தியில் தன்னிறைவு பெற்று விடும் என்று ஓர் அதிகாரி அடித்துச் சொல்லியிருக்கிறார், நம்பிக்கையுடன்.

எனவே புதிய திசைகளில் நமது கவனம் திரும்ப வேண்டும். ஆராய்ச்சிகளில் இறங்குமாறு விஞ்ஞானிகளை ஊக்க வேண்டும்.

அராபியர்களின் எண்ணெய் விலை ஏற்றம் என்ற அடாவடித்தனம் ஆரம்பமான உடனேயே அமெரிக்கா விழித்துக் கொண்டு புதுப் புது ஆராய்ச்சிகளில் இறங்கியுள்ளது.

இடைவிடாமல் காற்று வீசும் கடற்கரைப் பகுதிகளில் மாபெரும் காற்றாடிகளை வைத்து அவற்றின் சுழற்சியில் ஜெனரேட்டர்களை இயக்கி மின் உற்பத்தி செய்யும் முறையைச் சோதிக்கிறார்கள்.

சமுத்திரத்தின் சில பகுதிகளில் இரு மட்டங்களுக்கு இடையில் முப்பத்தைந்து டிகிரி வரை உஷ்ண வித்தியாசம் உள்ளதாம்! இந்த வெப்ப வேற்றுமையைப் பயன்படுத்தி ஜெனரேட்டர்களை இயக்க முடியுமா என்று பார்க்கிறார்கள். மின் ஜெனரேட்டர்கள் நடுக்கடலிலோ அல்லது கரையோரமாகவோ அமையலாம்.

கருமைப் பரப்பைச் சூரியக் கதிர்வீச்சம் தாக்கும்போது உஷ்ணமாக மாறுகிறது. இந்த வெப்பத்தை மின் உற்பத்திக்குப்

பயன்படுத்தலாம். எதிர்காலத்தில் பாலை வனங்கள்கூடப் பகைமையான பூமி போலவே ஒரு தேசத்தின் மதிப்பு மிக்க பிரதேசமாகும்!

அணுவைப் பிளக்கும்போது உருவாகும் உஷ்ணமே அணுமின் நிலையங்களில் மின் உற்பத்திக்குப் பயனாகிறது. அணுக் கூறுகள் இணைந்து அணுவாகும்போது முன்னதை விடப் பன்மடங்கு அதிகமான உஷ்ணம் உருவாகிறது. இவற்றை முறையே அணுகுண்டு ஹைட்ரஜன் குண்டு தயாரிப்புக்களில் பயன்படுத்துவதற்குப் பதில் ஆக்க ரீதியில் மின் உற்பத்திக்கு உபயோகிக்கலாம்.

இந்த ஆராய்ச்சிகளிலெல்லாம் அமெரிக்கா கோடிக்கணக்கான டாலர்களைக் கொட்டி வருகிறது. இந்தியா ஆராய்ச்சிக்கென்று அந்த அளவுக்குத் தொகை ஒதுக்க முடியாது தான். என்றாலும் நமது கவனம் இத்துறைகளில் செல்லத்தான் வேண்டும். நட்புறவுகளை வளர்த்துக் கொண்டு இயன்ற அளவு ஞானத்தை அவசியமான துறைகளில் பெற முயல வேண்டும்.

நவீன விஞ்ஞான நுணுக்கங்களைக் கடைப்பிடித்துப் பாரதம் முன்னேற வேண்டும் என்று ஆசைப்பட்டார் நேருஜி. 'நவீன விஞ்ஞான நுணுக்கங்களைப் பின்பற்றச் சில பல நவீனக் கருவிகள் இருந்தால் மட்டும் போதாது; நவீனமாகச் சிந்திக்கும் மனப்பான்மையை வளர்த்துக் கொள்ள வேண்டும்' என்றார்.

நவீன மனப்பான்மையைப் பெறுவதோடு எதிர்காலம் பற்றியும் யோசிக்க வேண்டிய நிர்ப்பந்தத்தை ஏற்படுத்துகிறது இன்றைய விண்வெளி விஞ்ஞான யுகம்.

# வாய்ப்புக் கொடுத்துப் பாருங்கள்!

சென்ற மாத மத்தியில் கம்யூனிஸ்டுகள் நீங்கலாக எதிர்க்கட்சித் தலைவர்கள் புதுதில்லியில் கூடிப் பேசினர். இந்த உரையாடல்களில் திரு கருணாநிதி அவர்களைச் சேர்த்துக் கொண்டது இன்றையச் சூழலில் வடிகட்டின அசட்டுத்தனமாகத் தோன்றினாலும் கூட்டத்தின் முடிவில் தலைவர்கள் விடுத்துள்ள அறிக்கை அவர்களிடையே பெருமளவு மனமாற்றம் ஏற்பட்டுள்ளதை உணர்த்துகிறது.

முன்பிருந்தது போன்ற கர்வமோ விறைப்பு முறைப்போ இன்றில்லை. அன்பும் பண்பும் கலந்த அறிக்கையாக விளங்குகிறது. எதிர்க்கட்சித் தலைவர்கள் பின்வரும் உறுதிமொழிகளை அளிக்கிறார்கள்:

1. மக்கள் சார்பில் அரசிடம் கோரிக்கைகளை வற்புறுத்த வன்முறைகளைக் கையாள மாட்டோம். அமைதியான முறைகளையே பின்பற்றுவோம். 2. பாராளுமன்ற ஜனநாயக அமைப்பில் நாங்கள் பரிபூரண நம்பிக்கை வைத்துள்ளோம். 3. எனவே அந்த அரசியல் முறை விதிக்கிற நியாயமான கட்டுப்பாடுகளுக்கு நாங்கள் உடன்படுவோம். 4. ஜனநாயகப் பண்புடன் அரசும் மக்களும் எதிர்க்கட்சிகளும் இயங்கப் பொருத்தமான கோட்பாடுகளை மூன்று தரப்பினருக்குமாக வகுத்துக் கொள்ளலாம். 5. தேசத்தின் ஐக்கியம், சுதந்திரம், ஒருமைப்பாடு ஆகியவற்றைப் பாதுகாக்க உறுதி பூணுகிறோம். 6. நமது மக்களின் வாழ்க்கையில் குறுக்கிடும் அயல்நாட்டுச் செல்வாக்குகளை நிராகரிக்க நிச்சயிக்கிறோம். 7. தேசத்தின் ஒருமைப்பாட்டுக்கு மட்டுமின்றி தேசிய ஒருமைப்பாட்டுக்கும் உழைப்பதாக உறுதியளிக்கிறோம். 8. பிராந்திய ரீதியான வேறுபாடுகளையோ, ஜாதி, மத, இன வேறுபாடுகளையோ, வகுப்புத் துவேஷங்களையோ, வளர்ப்பதில்லை என்று திடமாகச் சொல்கிறோம். 9. தேசத்தின் பொருளாதார முன்னேற்றத்திலும் ஏற்றத் தாழ்வுகளை நீக்கும் சமூக மாற்றங்களிலும் நாங்கள் மிகுந்த அக்கறை கொண்டிருக்கிறோம்.

இப்படி நவமணிகளாக ஒன்பது வாக்குறுதிகளை எதிர்க்கட்சியினர் அளித்திருக்கிறார்கள்.

இந்த அறிக்கையைப் பாரத ஜனநாயகத்துக்கு நமது பிரதமர் பெற்றுத் தந்துள்ள பரிசு என்றே கருதலாம்.

எதிர்க்கட்சிகளுக்கு ஒரு வாய்ப்புக் கொடுத்துப் பார்க்க வேண்டிய தருணம் வந்திருக்கிறது. அந்த வாய்ப்பை அவர்கள் துஷ்பிரயோகம் செய்தால் அந்த நம்பிக்கைத் துரோகத்தின் முதல் எதிர்விளைவு அரசு எடுக்கும் நடவடிக்கையல்ல; மக்களின் அனுதாபத்தை எதிர்க்கட்சிகள் அறவே இழப்பதுதான்.

ஜனநாயகத்தின் எல்லாச் சிறப்பு அங்கங்களும் சுதந்திரமாகவும் பொறுப்புணர்ச்சியுடனும் செயல்படும்போது ஏற்படும் மன நிறைவை அனுபவிக்க மக்கள் காத்திருக்கிறார்கள்.

# 76-ன் சிறந்த நாவல்?

சிறுகதைகளுக்கு மட்டுமின்றி நாவல்களுக்கும் ஊக்கமளிக்க இலக்கிய சிந்தனை அமைப்பு முன்வந்திருக்கிறது.

1976-ம் ஆண்டில் பத்திரிகைகளில் முற்றுப் பெற்ற தொடர்கதைகள் அல்லது முதற் பதிப்பாக வெளிவந்த நாவல்கள் அல்லது புதிய படைப்புக்கள் எதுவானாலும் சரி அனுப்பி வைக்கலாம். பரிசீலித்துச் சிறந்த படைப்புக்கு ரூ. 5000- பரிசு வழங்கத் தயாராயிருக்கிறது இலக்கிய சிந்தனை.

தமிழ்ப் புத்தாண்டு தினத்தில் இலக்கிய சிந்தனையின் ஏழாவது ஆண்டு விழாவில் பரிசு வழங்கப்படும்.

எழுத்தாளர்கள் தங்கள் படைப்புக்களை அனுப்புவதுடன் வாசகர்களும் பரிந்துரை செய்யலாம் என்கின்றனர் இலக்கிய சிந்தனை நிர்வாகிகள். முடிவு தேதி ஜனவரி 31ந் தேதி.

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி: இலக்கிய சிந்தனை, 5, கணபதி நகர், சென்னை—18.


அமோக
விளைச்சல்
பொங்கலோ
பொங்கல்!


எதிர்க்கட்சிகள்
இதையும் போட்டுக்
கொளுத்துங்கோ!
வன்முறை - கலவரம்


எம்.ஜி.ஆர்
இந்தியா

"यस्मिन्देशेहि यो जातः तस्मै तज्जौषधं हितम् ॥"

"எந்த தேசத்தில் (சீதோஷ்ண நிலையில்) எவன் பிறந்திருக்கிறானோ அவனுக்கு அந்நாட்டு மூலிகைகளே சிறந்த பலனை அளிக்கும்."

—(சரகஸம்ஹிதை)



## கும்பகோணம் "லலிதா பார்மஸி" மருந்துகளின் சிறப்பு அம்சங்கள்

ஸ்ரீ காஞ்சி பெரியவாளால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட பகவான் ஸ்ரீ தன்வந்திரியின் ஸன்னதியில் **மருந்துகள் தயாராவது.**

பல் வருஷங்கள், முறைப்படி "ஆயுர்வேதத்தை" அத்யயனம் செய்த நிபுணர்களின் நேர்பார்வையில் **மருந்துகள் தயாராவது.**

எந்த மருந்தையும் எளிதில் முறைப்படி தயாரிக்க உதவியாகப் பல உயர் வைத்ய நூல்கள் கொண்ட புத்தகசாலை, சிறந்த மூலிகைசாலையுடன் இணைந்து விளங்குவது.

○●○

சிறந்த ஆயுர்வேத மருந்துகளுக்கு

# லலிதா பார்மஸி

தலைமை ஆபீஸ்:

கும்பகோணம் Pincode: 612001
போன்: 123

பிராஞ்சுகள்:

மேல வீதி, தஞ்சாவூர் - 613001
போன்: 549

மஹாதானத் தெரு, மாயூரம் 609001
போன்: 379

வடக்கு வீதி, சிதம்பரம் - 608001
போன்: 472

நெ. 6, ரங்கநாதன் தெரு,
சென்னை - 600017
போன்: 441454

நெ. 60-B, கச்சேரி ரோடு,
சென்னை - 600004
போன்: 73007

---

கடிதம் மூலம் வைத்திய ஆலோசனை பெற விரும்புவோர்கள்
25 பைசா தபால் தலையுடன் தலைமை அலுவலகத்திற்கு எழுதக்கோருகிறோம்.

# "ஆறுகால்" ஸ்தோத்திரம்



ஜகத்குரு
ஸ்ரீ காஞ்சி காமகோடி
சங்கராசாரிய ஸ்வாமிகள்



"ஆறு கால்" என்றால் என்ன என்று கேட்டேன்.

கால் என்பது என்ன? நாலில் ஒரு பாகம் கால். ஒரு மனுஷ்ய சரீரத்தை எடுத்துக் கொண்டால் ஏறக்குறைய இடுப்புக்கு மேலே ஒரு பாதி, கீழே ஒரு பாதி என்று வைத்துக் கொள்ளலாம். கீழ் பாதி என்பது இரண்டு கால்தான். ஒவ்வொரு காலும் பாதியில் பாதியாக இருக்கிறது. அதாவது மனுஷ்ய சரீரத்தில் கால் பங்காக, நாலில் ஒரு பாகமாக இருப்பது கால்.

காலை சம்ஸ்கிருதத்தில் பதம் என்றும் பாதம் என்றும் சொல்கிறது. பொதுவாக நாம் leg என்பதைக் கால் என்றும், foot என்பதை பாதம், பதம் என்றும் அர்த்தம் பண்ணிக்கொண்டாலும் இந்த வார்த்தைகள் ஒரே அர்த்தத்திலும் பிரயோகமாகின்றன. உள்ளங்கால், புறங்கால் என்று சொல்கிறோமே, அப்போது பாதத்தை (foot)யே தானே கால் என்று அர்த்தம் பண்ணிக் கொள்கிறோம்?

ஆக நாலில் ஒரு பங்காக இருப்பது பதம், அல்லது பாதம். மனுஷ்ய சரீரத்தில் நாலில் ஒரு பங்கைப் பாதம் என்ற மாதிரியே, ஒரு ச்லோகத்தை எடுத்துக் கொண்டாலும் அதில் நாலில் ஒரு பங்குக்குப் பதம் என்றும் பாதம் என்றும் பெயர் கொடுத்தார்கள்.

தமிழில் காலை அடி என்று சொல்கிறோம். பகவானின் காலிலேயே கிடப்பவர்களை அடியார் என்கிறோம். அதே மாதிரி ஒரு செய்யுளை எடுத்துக் கொண்டாலும் அதில் ஒவ்வொரு பாகத்தையும் 'அடி' என்று சொல்கிறோம். 'நாலடியார்' என்றே நாலு வரிச் செய்யுளைச் சொல்கிறோம். முதலில் சொன்ன அடியார் வேறே, நாலடியாரில் வருகிற அடியார் வேறே! திருக்குறளை ஈரடி என்கிறோம். ஸம்ஸ்கிருதத்தில் பதம், பாதம் என்பது இரண்டு அர்த்தத்தில் உபயோகமாகிறாற் போலவே தமிழிலும் இருக்கிறது.

தமிழில் மட்டும் இல்லை. இங்கிலீஷிலும் foot என்று சொன்னால் மனுஷ்யனின் பாதம் என்பதோடு செய்யுளில் ஒரு பாகம் (division of a stanza) என்ற அர்த்தமும் இருக்கிறது. இங்கிலீஷில் foot என்று சொன்னால் பன்னிரண்டு அங்குல நீளத்தையும் குறிக்கும். தமிழிலும் இந்தப் பன்னிரண்டு அங்குல அளவை 'அடி' என்றே வைத்துக்கொண்டிருக்கிறோம். மனுஷ்யர்கள் எத்தனைதான் பேதப்பட்டுப் பிரிந்து போக நினைத்தாலும் பாஷைகள் அவர்களை ஒரு குடும்பமாகத்தான் காட்டுகிறது!

பதம் என்றால் வார்த்தை என்றே இப்போது அர்த்தம் பண்ணிக் கொண்டாலும், ச்லோகத்தில் நாலில் ஒரு பகுதிக்கும் பதம், பாதம் என்று பெயர். உதாரணம் சொல்கிறேன்.

சாதாரணமாக எல்லோருக்கும் தெரிந்த (அல்லது தெரிந்ததாக நான் நினைத்துக் கொண்டிருக்கிற) 'சுக்லாம்பரதரம்' ச்லோகத்தை எடுத்துக் கொள்வோம். அது அநுஷ்டுப் சந்தஸில் (சந்தத்தில்) அமைந்தது: அதாவது மொத்தம் 32 எழுத்துக்கள் இருக்கும்; இது நாலு எட்டெழுத்துக்களாகப் பிரிந்திருக்கும்.

தமிழ் எழுத்திலே எழுதி எண்ணினால் 32க்கு மேல் இருக்கும். ஏனென்றால், 'சுக்லாம்' என்கிறபோது 'க்லாம்' என்பதே தமிழில் மூன்று எழுத்தாகி விடும். ஆனால் கூட்டெழுத்து இருக்கிற சம்ஸ்கிருதத்தில், 'க்லாம்' ஒரே எழுத்துத்தான். அதனால் எழுத்து ரீதியில் லிபியைப் பார்த்துக் கணக்கு பண்ணாமல் எத்தனை vowel soundகள் (உயிரெழுத்து ஒலிகள்) இருக்கின்றன என்று கணக்குப் பண்ணினால்தான் சரியாக வரும். அப்படிக் கணக்குப் போட்டால் 'க்லாம்' என்பதில் 'ஆ' என்ற ஒரே ஓர் உயிரெழுத்தும், அதோடு க், ல், ம் என்ற மெய்யெழுத்துக்களும் சேர்வதாக ஆகும். அதாவது 'க்லாம்' என்பது ஒரே அக்ஷரம் என்று ஆகும். இப்படியேதான் பின்னாடி "விஷ்ணும்' என்கிற போது 'ஷ்ணும்' என்று தமிழில் மூன்று எழுத்தாக எழுதினாலும், அதில் 'உ' என்ற ஒரே உயிரெழுத்துக்கு முன்னும் பின்னுமாக ஷ், ண், ம் என்ற மெய் எழுத்துக்கள் சேருவதாக ஏற்படுவதால், 'ஷ்ணும்' என்பது ஒரே அக்ஷரம்தான் என்று ஆகும்.

உயிரெழுத்து, மெய் எழுத்து என்று சொல்கிறபோது சைவ சித்தாந்திகள் சொல்கிற ஒரு விஷயம் நினைவுக்கு வருகிறது. (தொடரும்)

---

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]

# கேர்ஃப்ரீ* பாதுகாப்பு




## அதாவது இது முழுமையான பாதுகாப்பு அளிக்கிறது. இதற்காக நீங்கள் கொடுக்கும் பணத்தைவிட மிக அதிக மதிப்பு வாய்ந்தது.

மாதத்தில் அந்த ஐந்து நாட்கள், பெண்களின் உடலுக்கு முழுவதும் நம்பகமான, தனிப்பட்ட பாதுகாப்பு தேவைப்படுகிறது: அதாவது கேர்ஃப்ரீ பாதுகாப்பு. சானிடரி பாதுகாப்பு சாதனங்களை உருவாக்கும் உலகின் தலையாய நிறுவனமான ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் இதைத் தயாரிக்கிறார்கள். ஒரு பெண்மணி பாதுகாப்பையும் காப்புறுதியையும் உணருவதற்குத் தேவையான சிறந்த அம்சங்களைக் கொண்டுள்ளது கேர்ஃப்ரீ.

**விசேஷ ஒண்டர்ராப் மேலுறை**
கேர்ஃப்ரீ தன் வடிவத்தை சீராகவைக்க உதவுகிறது...சாதாரண நேப்கின்களைப் போல் இது வளையவோ, கிழியவோ செய்யாது. இது உட்புற அடுக்குகளில் ஈரத்தை உறிஞ்சிக் கொள்கிறது. எனவே உங்கள் சருமம் உலர்ந்து இருக்கும், உங்களுக்கு சௌகரியமாக இருக்கும்.

**நீலநிற பிளாஸ்டி-ஷீல்ட் தடுப்பு**
கேர்ஃப்ரீயின் அடிப்பாகம் மற்றும் பக்கங்களைப் பராமரிக்கிறது பாதுகாப்பான பாலித்தீன். ஆகையால், அது இடம் விட்டு நகரும் வாய்ப்பில்லை; கறை படியும் பயம் இல்லை.

**அதிக உறிஞ்சும் தன்மையுள்ள விசேஷ பொருள்**
மிக நன்கு உறிஞ்சுகிறது: உறுதியுடன் பாதுகாப்பளிக்கிறது.

**கச்சிதமாகப் பொருந்த முனைப்பாகம்**
கேர்ஃப்ரீ மட்டுமே விரும்பியபடி சரிசெய்து கொள்ளும் நீளத்தில் வருவதால், அது உங்களுடைய உடலில் கச்சிதமாகப் பொருந்துகிறது. ஒவ்வொரு பேக்கிலும், இலவச கேர்ஃப்ரீ பெல்ட் ஒன்று வைக்கப்பட்டுள்ளது.

**எளிதில் ஒதுக்கிவிடலாம்**
கேர்ஃப்ரீ ஒரு ஆபத்தற்ற, எளிதில் ஒதுக்கித் தள்ளக்கூடிய நேப்கின்: இதை பிளஷ்ஷில் தள்ளிவிடலாம்...வெளியில் செல்லும் போதோ, பயணத்தின்போதோ இது ஒரு வரப்பிரசாதம்—
கேர்ஃப்ரீ பாதுகாப்பு:முழுமையான பாதுகாப்பினை விரும்பும் பெண்மணிக்கு இது மிகவும் முக்கியமானது.
கேர்ஃப்ரீ: உங்களுக்கு முழுமையான உறுதி தரும் பாதுகாப்பு.








## கேர்ஃப்ரீ:
## உங்களுக்கு முழுமையான உறுதி தரும் பாதுகாப்பு.

*சானிடரி நேப்கின்களின் வர்த்தகப் பெயர். கேர்ஃப்ரீ மற்றும் ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன், ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன், யு.எஸ்.ஏ-வின் ட்ரேட்மார்க்குகள்.

Johnson & Johnson

## 2. ஆத்மாவின் ஆவலும் நித்யமான அச்சமும்!

# விஞ்ஞானக் கதைகளும் வியப்பூட்டும் நிலைகளும்!

சுஜாதாவின் விஞ்ஞானச் சிறுகதைகளைப் படித்த பின் ஏற்பட்ட உணர்வுகள் என்ன? கேள்வி எளிதாகக் கேட்கப்பட்டு விட்டது. அநுபவரீதியான உணர்வுகளை வார்த்தைகளால் விளக்குவது மிகக் கடினம். இந்த உணர்ச்சிகளோ பலதரப்பட்டவை. சில சமயங்களில் குழப்பம் கூட. பல சமயங்களில் வியப்பும் ஆவலும். வெகு சமயங்களில் கதைக் கர்த்தாவை நினைத்து மூக்கில் விரலை வைக்க வேண்டிய அநுபவங்கள்!... மனத்தில் நித்யமாக ஒன்றிவிட்ட சில ஆத்மாக்கள் வேறு!...

இந்தக் கதைகள் வெளிவர ஆரம்பிப்பதற்கு நான்கு மாதங்களுக்கு முன்பு ஆல்வின் டாப்லரின் **Future :hock** ஐப் படிக்கும் வாய்ப்புக் கிடைத்தது. எனவே இந்தக் கதைகளைப் படிக்கப் படிக்க, அந்த நூலின் வாதங்களும், அவைகளின் கருவும் மனம் எனும் கம்ப்யூட்டரால் ஒப்புவமை பார்க்கப்பட்டன. அதன் வெளியீடுதான் இக்கட்டுரை.

கனவில்கூட நினைத்துப் பார்க்க முடியாத அளவுக்கு மகத்தான முறையில் வளர்ந்துள்ள இந்த எலெக்ட்ரானிக்ஸ் யுக விஞ்ஞானமும் அது தன் எல்லையில்லா விரைவினால் மனித வாழ்வில் ஏற்படுத்துகின்ற மாற்றமும்**(Change)** அந்த மாற்றத்தின் அதிதுரித வேகத்துக்கு ஈடுகொடுக்க முடியாத வண்ணம் திணறும் மனிதன் எப்படி **escapist** ஆகிறான் என்பதையும் ஆல்வின் டாப்லர் ஆதாரபூர்வமாகவே விளக்குகிறார். மனிதனுக்கும், அவன் வாழ்வில் தொடர்பு கொள்ளுகிற பிற மனிதர்கள், பொருள்கள், ஸ்தாபனங்கள், தொழில்கள் – இவற்றுக்கும் உள்ள நிலையான உறவு **(permanency)** விஞ்ஞானம் வளர வளர தாற்காலிகத் தன்மை **(Transience)** உடையதாக உருமாறுகிறது என்கிறார் அவர். இக்காரணங்களால் எதிர்காலத்தில் விஞ்ஞானம் மனிதனுக்குப் பல அதிர்ச்சிகளைத் தரவிருக்கிறது என்று முடிவு செய்கிறார் அவர்.

இப்படிப்பட்ட விஞ்ஞான யுகத்தில்—வீனஸ் ஜூபிடரில் காலனி அமைக்கும் யுகத்தில்—கற்பனைக் காமிராவினால், மனித வாழ்க்கையில் சில பகுதிகளை, கண்டு வியக்கக்கூடிய சில கோணங்களில் படம் எடுத்துத் தந்துள்ளார் சுஜாதா! மனிதனின் அடிப்படை உணர்வுகளைக்கூட இந்தப் பொல்லாத விஞ்ஞானம் அழித்து உருமாற்றி அவனையும் மில்லியன் மிஷின்களுடன் ஒன்றாக்கிவிடுமோ என்ற பயம் **Future Shock** ஐப் படித்தவுடன் எழுகிறது. ஆனால் சுஜாதாவைப் படித்தவுடன் இந்தப் பயம் விலகிவிட்டது. ஒரு திருப்திகரமான உணர்வு, ஒரு பெருமூச்சு! — காரணம் அவர் உலவ விட்டிருக்கும் பாத்திரங்கள் அப்படி!

'சூரியன்' பற்றி நம்மை விடப் பன்மடங்கு அறிந்த எதிர்காலக் கம்ப்யூட்டர் யுகத்திலும் கூட, பத்திரிகையாசிரியர் 'காலமானார்' என்றவுடன் அவர் தம்முடைய எதிராளியாக இருப்பானோ என்ற நப்பாசையின் உருவான கன தூதன் ஆசிரியர் ஆத்மா!... பொது அமைப்புக்கு எதிராகப் புரட்சி செய்யும் ஆத்மா மனிதனின் **RebelliousT endency**க்கு ஓர் உருவம்! வருங்கால யுகத்தின் 'தமிழாசிரியன்' மனோபாவங்களும், அவரது தலைவரின் மனிதத்தனமான சந்தேகங்களும் 'தேவன் வருவான்' என்ற நம்பிக்கைகளும், சொர்க்க நரக 'வாசல்க'ளும் இளமைக்கு ஆசைப்பட்டு காயகல்பத்தை உண்ட 'யயாதி'களும் — கர்ப்பக்கிருகப் பிரவேசம் முதல் காலேஜ் அட்மிஷன் வரை கையூட்டு என்ற இன்றைய நிலை போய், போலிக் கல்யாண லைசென்ஸ் முதல்... வரை என்று லஞ்ச ஊழல் புதுப் பரிமாணங்களை எய்தும் நிலைகளும், கொடுமையான 'ரூல் நம்பர் பதினேழு'களும் ஆகிய இவைகளை யெல்லாம் பார்க்கின்றபோது, ராட்சதக் கம்ப்யூட்டர்களும், ரோபாட்களும் லட்சமாயி விரிந்தாலும் மனிதனின் உணர்வுகளை **(Good and bad)** விஞ்ஞானம் மாற்ற முடியாது என்ற ஆறுதலளிக்கின்ற உணர்வு மனத்தில் எழுகிறது. ஏனென்றால் இந்த உணர்வுகள் இல்லையென்றால் மனித வாழ்க்கையில் சுவையில்லை, சத்து இல்லை. இந்தக் கதைவழிப் பார்வையினால் நோக்கினால் மனத்தில் ஒரு நிம்மதி.

இந்தக் கதை மாந்தரும் சம்பவங்களும் கற்பனையானாலும் இத்தகைய சூழல்கள் எழ அதிகமான சாத்தியக் கூறுகள் தென்படுகின்றன என்று சுஜாதா முன்னுரையிலேயே கூறியிருக்கிறார். இன்னும் சொல்லப்போனால் டாப்லரின் சில வாதங்களும் கூட ஊகத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்த கட்டங்களே!

எப்படி இருப்பினும் கதையைப் படித்தபோது ஆத்மாவாகவும் நித்யாவாகவும் மாறவேண்டும் என்ற ஆவல் உணர்ச்சி தோன்றாமலில்லை. அதே நேரத்தில் அவர்கள் சந்தித்த சூழல்களையும் விசித்திர சம்பவங்களையும் நம்மால் தைரியத்துடன் எதிர்நோக்க முடியுமா என்று எண்ணும்போது இயல்பான அச்சமும் ஐயமும் தோன்றவே செய்கின்றன!

சுஜாதாவுக்கும் இந்த முயற்சிக்கு ஆதரவளித்த கல்கிக்கும் அதன் வாசகன் என்ற முறையில் எனது நன்றியும் பாராட்டும்.

- பி. எஸ். ராகோத்தமன்






## உங்கள் இதயத்திலே இன்பம் பொங்கட்டும்

இத்தைத்திங்கள் திருநாளில் உங்கள் நல்லாசியிலே வளர்ந்த பயிரான எங்கள் ஸ்தாபனங்கள் உங்கள் நல் ஆதரவுடன் மேலும் மேலும் செழித்து வளர ஆசி வேண்டுகிறோம். எங்கள் நாணயம் தான் அதன் ஆதாரம்.



**உம்மிடி ராமைய செட்டி,**
**குருஸ்வாமி செட்டி அண்டு கோ,**
23/25, நேதாஜி போஸ் ரோட்,
சென்னை 600 001.
போன்: 31902 & 31758



**உம்மிடி சாரதி ஜுவல்லர்ஸ்**
40, பாண்டி பஜார், மாம்பலம்,
சென்னை 600 017. போன்: 442500



**உம்மிடியார் பாங்கர்ஸ்**
40, பாண்டி பஜார், மாம்பலம்,
சென்னை 600 017. போன்: 444726

உன்னதப் பண்பாட்டின்
தலைமையகம்
உங்கள் உம்மிடியார் ஜுவல்லர்ஸ்.

**உம்மிடியார் சில்வர்வேர்ஸ்**
40, பாண்டி பஜார், மாம்பலம்,
சென்னை 600 017. போன்: 442500



**உம்மிடி சாரதி அண்டு சன்ஸ்**
40, கதீட்ரல் ரோட்,
(ஹோட்டல் சோழா எதிரில்)
சென்னை 600 006.



• **உம்மிடியார்ஸ் டிஸ்ரிபியூடர்ஸ்**
எம். யூ. சி. கார்னர்
சென்னை 600 003. போன்: 29757



- **உம்மிடி பாம்ஸ் ஏஜென்ஸீஸ்**
40, பாண்டி பஜார், மாம்பலம்,
சென்னை 600 017.
போன்: 442500

ADWAVE/VSJ/521

# பார்த்திபன் கனவு

அத்தியாயம் 27

## கண்ணீர்ப் பெருக்கு

வள்ளியும் பொன்னனும் குடிசைக்கு வெளியில் வந்தபோது, பார்த்திப மகாராஜாவின் காலத்துக்குப் பிறகு அவர்கள் பார்த்திராத அதிசயமான காட்சியைக் கண்டார்கள். உறையூர்ப் பக்கத்திலிருந்து காவேரிக் கரைச் சாலை வழியாக அரச பரிவாரங்கள் வந்து கொண்டிருந்தன. குதிரைவீரர்களும், காலாட் படைகளும், கொடி, பரிவட்டம் முதலிய இராஜச் சின்னங்கள் ஏந்திய வீரர்களும், சங்கம், துந்துபி முதலிய பல்வகை வாத்தியங்கள் முழங்குகிறவர்களும், வெண் சாமரம் ஏந்திய சேடிமார்களும் வரிசை வரிசையாக வந்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு மத்தியில் அரசர்கள் ஏறுவதற்குரிய — அலங்கரித்த உயர் ஜாதிப் புரவிகளும், இராஜ ஸ்திரீக்குரிய முத்து விதானம் கட்டிய தந்தப் பல்லக்குகளும் வந்து கொண்டிருந்தன.

இந்த இராஜ பரிவார மெல்லாம் தோணித் துறைத் தோப்பில் வந்து இறங்கத் தொடங்கியபோது, ஓடக்காரப் பொன்னனும் அவன் மனைவியும் ஆச்சரியக் கடலில் மூழ்கினார்கள்.

இதோடு ஆச்சரியம் முடிந்தபாடில்லை. காவேரி நதியில் அதே சமயத்தில் ஒரு விந்தைக் காட்சி காணப்பட்டது.

உறையூர்ப் பக்கத்திலிருந்து அலங்கரித்த பல படகுகள் அன்னப் பட்சிகளைப்போல் மிதந்து கிழக்கு நோக்கி வந்து கொண்டிருந்தன.

அவற்றின் நடுவில் சிங்கக் கொடி பறந்த அழகிய படகைப் பார்த்ததும், சக்கரவர்த்தியும் அவருடைய பரிவாரங்களும்தான் வருகிறார்கள் என்பது பொன்னனுக்குத் தெரிந்து போயிற்று.

ஒருவேளை அந்தப் படகுகளெல்லாம் இந்தத் தோணித் துறைக்குத்தான் வருமோ என்று பொன்னன் எண்ணமிட்டுக் கொண்டிருக்கையிலேயே, படகுகளின் திசைப் போக்கு மாறியது! காவேரியைக் குறுக்கே கடந்து வசந்தத் தீவை நோக்கி அவை செல்லத் தொடங்கின. ''ஓகோ! சக்கரவர்த்தி வசந்தத் தீவுக்கு ஏன் போகிறார்? ஒருவேளை மகாராணியைப் பார்க்கப் போகிறாரோ?'' என்று பொன்னன் நினைத்தான். உடனே, தோப்பில் வந்து இறங்கிய வீரர்களிடம் நெருங்கிப் போய் விசாரித்தான். அவன் எண்ணியது உண்மை என்று தெரிந்தது. சக்கரவர்த்தியுடன் குந்தவி தேவி, சிறுத்தொண்டர், அவருடைய பத்தினி முதலியோர் அருள்மொழி ராணியைப் பார்க்க வசந்தத் தீவுக்குப் போகிறார்களென்று அறிந்தான். மேலும், விசாரித்து, அவர்கள் அங்கிருந்து திரும்பி இந்தத் தோணித் துறைக்கு வருவார்களென்றும், இங்கிருந்து சிறுத்தொண்டர் கீழச் சோழநாட்டுக்கு யாத்திரை போகிறார் என்றும், சக்கரவர்த்தியும், குந்தவிதேவியும் உறையூருக்குத் திரும்புகிறார்கள் என்றும் தெரிந்து கொண்டான்.

அந்தச் சமயம் வசந்தத் தீவில் தானும் இருக்க வேண்டும் என்றும், என்ன நடக்கிறது என்று தெரிந்து கொள்ள வேண்டும் என்றும் பொன்னனுக்கு உள்ளம் துடித்தது. ஆனால் அந்த ஆவலை வள்ளியிடம் தெரிவித்தபோது அவள், ''நன்றாயிருக்கிறது! சக்கரவர்த்தி அங்கே போயிருக்கும்போது, அவருடைய கட்டளையில்லாமல் நீ ஏன் அங்கே போக வேண்டும்? என்ன நடக்கிறதென்று தானே தெரிகிறது. அவசரம் என்ன?'' என்றாள்.

எனவே, பொன்னன் துடிதுடித்துக் கொண்டு இக்கரையிலேயே இருந்தான். ஒரு முகூர்த்த காலம் ஆயிற்று. வசந்தத் தீவின் தோணித் துறையில் கலகலப்பு ஏற்பட்டது. பலர் அங்கே கும்பலாக வந்தார்கள். படகுகளிலும் ஏறினார்கள். படகுகள் இக்கரையை நோக்கி வரத் தொடங்கின.

வருகிற படகுகளை மிகவும் ஆவ்லுடன் வள்ளியும் பொன்னனும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அருகில்

அமரர் கல்கி

நெருங்க நெருங்கப் படகுகளில் இருந்தவர்கள் கண்ணுக்குத் தெரிய ஆரம்பித்தார்கள். சிங்கக் கொடி கம்பீரமாகப் பறந்த படகிலே சக்கரவர்த்தியும், ஒரு மொட்டைச் சாமியாரும் இருந்தார்கள்.

இதற்குள் அவர்களுடைய பார்வை இன்னொரு படகின் மேல் சென்றது. அதில் மூன்று பெண்மணிகள் இருந்தார்கள். ஒருவர்தான் குந்தவி தேவி; இன்னொருவர் சிவ விரதம் பூண்ட மூதாட்டி. ஆனால் மூன்றாவது யார்?— இதென்ன விந்தை? — அருள்மொழித் தேவி போல் அல்லவா இருக்கிறது?

ஆமாம். அருள்மொழித் தேவிதான். படகு கரையை அடைந்து எல்லோரும் இறங்கியபோது, பொன்னனும், வள்ளியும் வேறு யாரையும் பார்க்கவுமில்லை; கவனிக்கவுமில்லை. அருள்மொழித் தேவியின் காலில் விழுந்து எழுந்து அவள் முகத்தையே பார்த்துக் கொண்டு திகைத்து நின்றார்கள்.

அருள்மொழித் தேவி அவர்களை நோக்கித் தழுதழுத்த குரலில் கூறினாள்:

''பொன்னா! வள்ளி! என்னால் இங்கே தனியாகக் காலம் கழிக்க முடியவில்லை. நான் திவ்ய ஸ்தல யாத்திரை போகிறேன். நீங்கள் என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். இந்தத் தோணித் துறையிலேயே இருந்து கொண்டிருங்கள். ஒருவேளை எப்போதாவது மறுபடியும் திரும்பி வந்தால்...''

இந்தச் சமயம் பொன்னன்—வள்ளி இருவர் கண்களில் கண்ணீர் பெருகுவதை அருள்மொழித் தேவி கண்டதும் அவளுக்கும் கண்ணில் நீர் துளித்தது. பேச முடியாமல் தொண்டையை அடைத்தது. பக்கத்திலிருந்த சிவ விரதையின் கரத்தைப் பிடித்துக் கொண்டு மேலே நடக்கத் தொடங்கினாள்.

அன்றைய தினம் அந்தக் காவேரிக் கரைத் தோணித் துறையிலே கண்ணீர்ப் பிரவாகம் ஏராளமாய்ப் பெருகித் தண்ணீர்ப் பிரவாகத்துடன் போட்டியிட்டது.





சக்கரவர்த்தியும் சிறுத்தொண்டரும் பிரிந்தபோது, அவர்களுடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருகிற்று.

சிறுத்தொண்டரின் பத்தினியிடமும் அருள்மொழித் தேவியிடமும் குந்தவி விடை பெற்றுக் கொண்ட சமயம் அவர்கள் எல்லோருடைய கண்களிலிருந்தும் கண்ணீர் ஆறாய்ப் பெருகிற்று.

கிழக்குத் திசை போகிறவர்கள் முதலில் கிளம்பினார்கள். சிறுத்தொண்டர் தனியாக ஒரு பல்லக்கில் ஏறி அமர்ந்தார். அவர் பத்தினியும் அருள்மொழித் தேவியும் இன்னொரு பல்லக்கில் அமர்ந்தார்கள். சேடிகளும், பரிவாரங்களும் தொடர்ந்து வர, குதிரை வீரர்கள் முன்னும் பின்னும் காவல் புரிந்துவர, சிவிகைகள் புறப்பட்டன.

சிவிகைகள் சற்றுத் தூரம் போன பிறகு, பொன்னனுக்குத் திடீரென்று ஒரு விஷயம் ஞாபகம் வந்தது. அவன் ஓட்டமாய் ஓடி அருள்மொழி இருந்த பல்லக்கை நெருங்கினான். தேவியும் சிவிகையை நிறுத்தச் சொல்லி, ''பொன்னா! என்ன? இவ்வளவு படபடப்பு ஏன்?'' என்றாள்.

''தேவி !.....'' என்று பொன்னன் மேலே பேச நாவெழாமல் திகைத்தான்.

''ஏதோ சொல்ல விரும்புகிறாய் போலிருக்கிறது.பயப்படாமல்சொல்லு, இந்த அம்மையார் இருப்பதனால் பாதகமில்லை'' என்றாள் ராணி.

''தேவி! பெட்டியைப் பற்றிச் சொன்னீர்களல்லவா?''

''என்ன, கிடைத்து விட்டதா?'' என்று ராணி ஆவலுடன் கேட்டாள்.

''ஆமாம்; இல்லை. சீக்கிரம் கிடைத்து விடும். அதை...'' என்று தடுமாறினான் பொன்னன்.

அருள்மொழி சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். பிறகு ''பொன்னா! பெட்டியை நீதான் பத்திரப் படுத்தி வைக்க வேண்டும். முன்னமே உன்னிடம் ஒப்புவிப்பதாகத்தான் இருந்தேன். ஒரு வேளை... ஒரு வேளை... நான் இல்லாத சமயத்தில் அவன் வந்தால்...'' என்று ராணி மேலே பேச முடியாமல் விம்மத் தொடங்கினாள்.

பொன்னன், ''ஆகட்டும் அம்மா! இளவரசரிடம் பத்திரமாக ஒப்படைத்து



அட்டைப்பட விளக்கம்

# நாடி வந்த நாட்டவர்க்கு நல்வரவு!



பால் பொங்கட்டும் பாட்டும் சிறக்கட்டும்,
பொங்கல் திருநாளில் பௌலிங் துலங்கட்டும்!

நாடி வந்த நாட்டவர்க்கு நல்வரவு கோடி,
தேடித்தேடி அலைந்தாலும் கிட்டாத் தலைமை பேடி!

ஜுரம் தணிந்து கிரெய்க் ஜோராக ஆடட்டும்
தரம் குன்றாத ஆட்டம் தப்பாமல் கிட்டட்டும்!

ரன்கள் குவியட்டும் 'ஸன்'னும் ஒளிரட்டும்
வன்மம் ஏதுமின்றி நட்பும் வளரட்டும்!

மின்னலாய்ப் பறக்குது லீவரின் பந்து
சன்னமாய்த் துடிக்குது ரசிகர்கள் நெஞ்சு!

வீரத்தின் விளைநிலம் விஸ்வநாதன் ஆட்டம்
வீழ்ந்தால்தான் என்ன! அடுத்த தரம் பார்ப்பம்.

சக்கரமாய்ச் சுழலுது கவாஸ்கரின் மட்டை
சக்கரையாய்க் கரையுது கன்னிகையின் கோட்டை!

வெங்கட்டும் சந்திராவும் வீசும் சுருள் பந்து
வெங்காயம் உரிவது போல் வீழ்கின்ற விக்கட்டு!

அமிஸ் கை மட்டை நீட்டு மெழிற் கோலம்
தமிழகத்தில் அவர் சமைக்கும் நட்புறவுப் பாலம்!

விக்கட் வீழ்ந்தாலும் விவாதம் நிகழ்ந்தாலும்
ஸிக்ஸர் பறந்தாலும் ஸிங்கிளும் துறந்தாலும்,

சதம் கண்டாலும் வதமாகி விழுந்தாலும்
பதமான காட்சையே கோட்டை விட்டாலும்,

அபாரத் தொடக்கம் அறுவையாய் முடிந்தாலும்
அம்பயர் தீர்ப்பு அம்பேலாய்ப் போனாலும்,

கிரிக்கெட் பண்புடன் சிரிக்கட்டுப் போவோம்
கரித்துக் கொட்டாமல் சிரித்து வைப்போம்!

மேலட்டை காப்டன்களின் வண்ணப் படங்கள்:
- 'பாலாஜி போட்டோகிராப்ஸ்'

---

விடுகிறேன்'' என்று அழுதுகொண்டே சொன்னான்.

சிவிகை மேலே சென்றது.

■ ■ ■

பொன்னன் திரும்பிவந்த போது, சாலையில் பல்லக்கின் அருகில் நின்று குந்தவி தேவி கண்ணீர் விடுவதையும், சக்கரவர்த்தி அவளைத் தேற்றுவதையும் கண்டான்.

''எனக்குத் தாயார் கிடைத்ததாக எண்ணி மனம் மகிழ்ந்தேன் அப்பா! அதற்குக் கொடுத்து வைக்கவில்லை!'' என்று குந்தவி சொன்னது பொன்னன் காதில் விழுந்தது.

குந்தவி சிவிகையில் ஏறினாள். சக்கரவர்த்தி குதிரை மீது ஆரோகணித்தார். உறையூரை நோக்கி அவர்கள் கிளம்பினார்கள்.

பொன்னன் குடிசைக்குள் நுழைந்ததும் வள்ளி கண்ணீர் பெருக்கிக் கொண்டிருப்பதைக் கண்டான்.

''ஐயோ! எனக்கு முன்னமே தெரியாமல் போச்சே! தெரிந்திருந்தால் மகாராணியுடன் நானும் வருவதாகச் சொல்லியிருப்பேனே! எனக்கு மட்டும் இங்கு என்ன வேலை?'' என்று வள்ளி புலம்பினாள்.

பொன்னன் சிறிது தைரியப்படுத்திக்கொண்டு, ''கடைசியில், பெண் பிள்ளை என்பதைக் காட்டி விட்டாயல்லவா? பிரமாத வீரமெல்லாம் பேசினாயே!'' என்றான்.

அச்சமயத்தில், மறுபடியும் வெளியில் குதிரையின் காலடிச் சத்தம் கேட்கவே, இருவரும் ஓடி வந்து பார்த்தார்கள். சக்கரவர்த்தி மட்டும் குதிரை மேல் தனியாகத் திரும்பி வந்தார்.

''பொன்னா! நீ இந்தத் தோணித் துறையில்தானே இருக்கப் போகிறாய்? எங்கேயும் போய்விட மாட்டாயே?'' என்று கேட்டார்.

''இங்கேதான் இருப்பேன் பிரபு! எங்கும் போக மாட்டேன்'' என்றான் பொன்னன்.

''அதோ பார்! அரண்மனைப் படகை இங்கேயே விட்டு வைக்கச் சொல்லியிருக்கிறேன். குந்தவி தேவி ஒருவேளை வசந்த மாளிகையில் வந்து இருக்க ஆசைப்படலாம். அப்போது நீதான் படகு ஓட்ட வேண்டும்.''

''காத்திருக்கிறேன், பிரபோ!''

''இன்னொரு சமாசாரம். சிவனடியார் ஒருவர் — என் சிநேகிதர் — உன்னிடம் ஒப்புவிக்கும்படி ஒரு பெட்டியைக் கொடுத்தார். அது அந்தப் படகின் அடியில் இருக்கிறது. பார்த்து எடுத்துக்கொள்.''

இவ்விதம் சொல்லிவிட்டு, சக்கரவர்த்தி வள்ளியை நோக்கினார். அதுவரையில் அவரையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்த வள்ளி சட்டென்று தலையைக் குனிந்தாள். அவளுடைய முகத்தில் வெட்கத்துடன் கூடிய புன்னகை உண்டாயிற்று.

அடுத்த கணத்தில், சக்கரவர்த்தியின் குதிரை காற்றாய்ப் பறந்து சென்றது.

(தொடரும்)

உங்கள் குடும்பத்திற்கு
உற்சாகம் பொங்கும்
ஆரோக்கியமும்,
அதிகப்படி சக்தியும்
இதோ!

வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக்.
இன்றியமையாத 12 சேர்க்கைப்
பொருள்கள் சமசீராக அடங்கப்
பெற்ற டானிக்காகும். வளர்ச்சிக்கும்,
சக்திக்கும் விட்டமின்கள். இரத்த
ஆரோக்கியத்திற்கு. இரும்புச் சத்து
பசியைத் தூண்டுவதற்கான
ஊக்கப் பொருள்கள். தவிர, அது
அருமையான சுவையுமுடையது.

உங்கள் குடும்பத்திற்கு
வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக்
வாங்குங்கள். இப்பொழுதே.




மஞ்சள்
லேபிளை
நாடுங்கள்

வாட்டர்பரீஸ்
விட்டமின் டானிக்
குடும்பம் முழுவதற்கும் பரிபூரணமான டானிக்

Grant.11 TM

# வட்ட மேஜை

☐ அடடா இதென்னய்யா அற்புதம்! எவரெஸ்ட் உயரமே எட்டு கிலோ மீட்டர்தான். ஷில்லாங்கின் உயரம் 1500 கிலோ மீட்டரா?

சென்னை - 17
1-1-77 கே. எஸ். கணபதி

ஸாரி, 1500 மீட்டர். - ஆசிரியர்

☐ எங்கள் முதல் கதை ''விசித்திர உறவுகள்'' பத்திரிகை உலகில் புகழ் வாய்ந்த 'கல்கி'யில் மூன்றாவது பரிசைப் பெற்றுப் பிரசுரமானது குறித்து நாங்கள் மிகவும் பெருமைப்படுகிறோம்.

எத்தனையோ இரட்டையர்கள் இவ்வுலகில் பல துறைகளில் முன்னேறியுள்ளார்கள். நாங்கள் எழுத்துலகில் முன்னேற வேண்டும் என்ற எண்ணத்தோடு எங்களைப் பிணைத்துக் கொண்டோம். எங்கள் பெயர்களின் முதல் எழுத்துக்களின் சங்கமம்தான் 'சுபா' என்னும் புனைபெயர்! இதுவே எங்களுக்குள் இருக்கும் விசித்திர உறவு!

சென்னை—5 தா. சுரேஷ்
3—1—77 அ. ந. பாலகிருஷ்ணன்



☐ கு. க. அறுவைச் சிகிச்சை பற்றி இன்று எல்லார் மனத்திலும் பரவலாக எழும் பலவித அச்சம், சந்தேகம் இவைகளைத் தெளிவாக மருத்துவ ரீதியான விளக்கங்களுடன் 'குட் மார்னிங் டாக்டர்' பகுதியில் பிரசுரித்து உள்ளீர்கள். இதனால் எண்ணற்ற குடும்பங்கள் பயன் பெற்று நாடும் நல்ல முன்னேற்றம் அடையத் தேசப் பணியாற்றி யிருக்கிறீர்கள்.

பெங்களூர்
30-12-76 டி. மாயம்பெருமான்

☐ சாதுக்கள் நாட்டின் பல கோவில்களுக்கு நடந்தே சென்று ஆண்டவனைத் தரிசித்து வருபவர்கள். இதனால் அவர்கள் தங்கள் தேவைகளை மக்களிடம் யாசித்துப் பெற்று நிறைவு பெறுகின்றனர். யாசிப்பது நம் இந்து சமயக் கோட்பாட்டின்படி அனுமதிக்கப்பட்டதே.

பிட்சாண்டமூர்த்தியாக நம் சிவனே இருக்கின்றார். யாசிப்பது என்பது வெறும்பொருளை வேண்டுவது இல்லை. யாசிப்பவர், அவருக்குக் கொடுப்பவருக்குத் தேவையானவற்றைத் தம் தவ வலிமையால் தந்தே அந்தப் பொருளை அவர்களிடம் இருந்து பெறுகின்றனர். சமீபத்தில் நடந்த திருவண்ணாமலை தீபத்தின் போது, அங்கிருந்த சாதுக்கள் அனைவரையும் சிறைப்படுத்திப் பிறகு அவர்களை விடுவித்தார்களாம். நம்மால் தெய்வத்திற்கு இணையாகப் போற்றப்படும் சாதுக்களை இவ்வாறு நடத்தி இருப்பது மிகவும் மன வருத்தம் தருகின்றது.

கோவை—4
22—12—76 சிவனடிமை

☐ சென்னைப் பெருநகரை அடுத்துள்ள ஆதம்பாக்கம், மேற்கு வேளச்சேரி போன்ற ஊர்களில் நியூ காலனி, மகாலட்சுமி நகர், பிருந்தாவன நகர், ஜோசப் காலனி போன்ற பல காலனிகள் இருக்கின்றன. சுமார் மூன்றில் ஒரு பாகம் ஆலந்தூர் முனிசிபாலிட்டியிலும், மற்றவை வேளச்சேரி பஞ்சாயத்துப் பராமரிப்பிலும் உள்ளன. இக்காலனிகள் ஏற்பட்டுப் பத்து ஆண்டுகளுக்கு மேல் ஆகியும் எந்த விதச் சௌகரியங்களும் செய்து தரவில்லை என்பது வேதனைக்குரிய செய்தி. வீட்டு வரிச் சுமையோ அளவுக்கு மீறியதாக இருக்கிறது.

நல்ல ரோடுகள் இல்லை, சில இடங்களில் ரோடுகளே இல்லை. பல தெருக்களில் மின்சார விளக்குகள் போடவில்லை. பழுதடைந்து போன விளக்குகளைப் பல மாதங்களாகியும் எரிய விடுவதற்கான முயற்சிகள் கூட எடுக்காத பொறுப்பற்ற அதிகாரிகள், சிப்பந்திகளைத்தான் காண முடிகிறது. சமீபத்திய பெரு மழை இருந்த ரோடுகளையும் பாழாக்கி விட்டது. இந்த நேரத்தில் அரசாங்கம், இப்பகுதிகளில் ரோடுகளைச் செப்பனிடுவதற்கும், புது ரோடு அமைப்பதற்கும் ஆலந்தூர் நகராட்சிக்கும், வேளச்சேரி பஞ்சாயத்துக்கும் போதுமான நிதி உதவி அளித்து உத்தரவு பிறப்பிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறோம்.

இப்பகுதிகளிலிருந்து சென்னைக்குச் செல்லப் பரங்கிமலை ரயில்வே நிலையத்துக்குத்தான் செல்ல வேண்டியதாயிருக்கிறது. இப்பகுதியிலிருந்து பரங்கிமலை ரயில்வே நிலையத்துக்கு பஸ் விட டிரான்ஸ்போர்ட் இலாகா ஒத்துக் கொண்டிருக்கிறது. இதற்கு ஆதம்பாக்கம் வெள்ளாளத் தெருவிலிருந்து தொடங்கி ஏரிக்கரை ரோட்டைச் சீர்ப்படுத்தித் தரும்படி ஆலந்தூர் நகராட்சிக்கும், வேளச்சேரி பஞ்சாயத்துக்கும் ஹைவேஸ் டிபார்ட்மெண்டுக்கும் அரசாங்கம் அருள் கூர்ந்து ஆணை பிறப்பிக்க வேண்டுகிறோம்.

சென்னை—88 ஏ. ஆர். பரமேசுவரன் பிள்ளை
8—12—76 காரியதரிசி, நண்பர்கள் குழாம்

## எவரெஸ்டை விட உயர்ந்த எழுத்து!

ஆரம்பக் காட்சிகளிலே குறும்பும், குதூகலமும், காதல் ரம்மானமும் பொங்கி வழிகின்றன. படம் இடைவேளையை நெருங்கும்போது குழப்பமும், கண்ணீரும் வந்து கப்பிக் கொள்ளுகின்றன.

ஏழை ராஜாவுக்குப் பணக்கார நண்பன் கோபால். ராஜாவுக்காக எதையும் செய்யத் தயாரா யிருக்கும் கோபால், தன் திருமணத்தையே நிறுத்தி, தனக்கு மனைவியாக வரவேண்டியவளை ராஜாவுக்கு மணம் முடித்து வைக்கிறான். ஏன்? மணப் பெண் ஜானகி ராஜாவின் காதலி என்னும் உண்மை தெரிந்து விடுகிறது!

ஏழை ராஜாவுக்கும் பணக்காரப் பெண் ஜானகிக்கும் காதல் ஏற்படும் கட்டங்களில் சிவாஜியின் நடிப்பு சிறப்பாக இருக்கிறது. கல்லூரி நாடகத்தில் நடித்து ஜானகியின் அன்புக்குப் பாத்திரமான பிறகு, ஒரு நடன நிகழ்ச்சியில் இருளில் இருவரும் சாக்லேட் பரிமாறிக்கொள்ளப் போக ஜானகிக்குப் பதிலாக அவள் அம்மாவிடம் சாக்லேட்டைக் கொடுத்துவிட்ட விபரீத நிலையை வீட்டுக்குப் போய் நினைத்துக் கொண்டு தனக்குத் தானே ராஜா சிரிக்கிறான். சிவாஜி இந்தக் கட்டத்தில் மிகவும் சுவாரசியமாக நடிக்கிறார். நண்பன் கோபாலுக்காக ஜானகியைப் பெண் பார்க்கப் போனபோது ஏற்பட்ட அதிர்ச்சி, அதைத் தொடர்ந்து ஏற்பட்ட சித்தப் பிரமை ஆகிய கட்டங்களில் நடிகர் திலகத்தின் நடிப்பு சபாஷ் பெறுகிறது.

சிவாஜியோடு இணைந்து நடிக்கும் வாணிஸ்ரீ குதூகலம், குழப்பம், துயரம் ஆகிய எல்லாக் கட்டங்களிலும் நன்றாக நடித்துப் பாராட்டுப் பெறுகிறார். அவரும் சாக்லேட் சம்பவத்தை நினைத்துத் தமக்குத் தாமே சிரித்துக்கொள்ளும்போது நடிப்பில் சபாஷ் போட வைக்கிறார்.

மனோகர் கள்ளக் கடத்தல்காரராக வந்து படத்துக்கு வில்லன் இல்லாக் குறையைத் தீர்த்து விடுகிறார். (ஆனால், வில்லன் வந்ததுமே ரசிகர்கள் பெருமூச்சு விட ஆரம்பித்து விடுகிறார்களே, என்னத்தைச் சொல்ல!)

ஏ. வீரப்பனின் கதை நடிகர்களின் நடிப் பாற்றலால் பாராட்டுப் பெறுகிறது. 'வியட்நாம் வீடு' சுந்தரம் எழுதியிருக்கும் வசனம் சுவையா யிருக்கிறது.

நட்புக்கு அணிகலனாக வரும் ஏ. வி. எம். ராஜன், ஜானகியின் தந்தையாக வரும் மேஜர் சுந்தரராஜன், வில்லன் ஸ்ரீகாந்த் ஆகியவர்கள் திரைக் கதையின் திருப்பத்துக்கு இன்றியமையாத பாத்திரங்கள். அப்பா அம்மா, மகன் ஆகிய மூன்று வேடங்களில் நடிக்கும் 'சோ'வுடன் மனோரமாவும் சேர்ந்து கொண்டு நகைச்சுவையை மிகவும் சுவையாக வழங்கியிருக்கிறார்.

''ஜனகனின் மகளை மணமகளாக ராமன் நினைத்திருந்தான்'' என்ற கவியரசு கண்ணதாசனின் கருத்துள்ள பாடல் பி. சுசீலாவின் சுகமான சாரீரத்தில் ஒலித்து ரசிகர்களைக் கண் கலங்க வைக்கிறது. இந்த வண்ணப் படத்தின் ஒளிப் பதிவை ஏ. வின்சென்ட் அருமையாய்ச் செய்திருக்கிறார்.

கதையின் முடிவு தெரிந்ததுதான் என்றாலும் ''ரோஜாவின் ராஜா'' அலுப்புத் தட்டவில்லை. மணம் வீசுகிறது.

—காந்தன்



சங்கரி என்று பெற்றோர் இட்ட பெயர் பிடிக்காமல் லாவண்யா என்று மாற்றி வைத்துக்கொண்ட அவள் ஒரு பட்டதாரி. மதுரைக்கு வரும் அயல் நாட்டுச் சுற்றுலாப் பயணிகளுக்கு அந்நகரின் சிறப்புகளைக் காண்பித்து விளக்கி நாளொன்றுக்கு இருபது ரூபாய் சம்பாதித்த லாவண்யா, அதன் பெரும் பகுதியைச் சுயநலத்துடன் சேமித்து வந்தாள். காரணம், தனக்கு நல்லபடியாகத் திருமணம் செய்து வைக்கக் குடும்பத்தின் வறுமைச் சூழல் இடம் தராது என்று அவள் அறிந்திருந்ததுதான். படித்துப் பட்டம் பெற்றுச் சுயமாகச் சம்பாதிக்கவும் தொடங்கிய பிறகு ஒரு சமையல்காரரின் மகள் என்று தன்னைச் சொல்லிக் கொள்ளக்கூட அவளுக்கு வெட்கமாய் இருந்தது. இந்த மனநிலை வீட்டிலே தாயாருடனும் தம்பியுடனும் அடிக்கடி தர்க்கத்தில் ஈடுபட வைத்தது. தகப்பனாரிடம் ஒட்டுதலின்றிப் பழகச் செய்தது.

தாயார், தன் சேமிப்புப் பணத்திலிருந்து ஒரு கணிசமான பகுதியைக் கேட்டபோது அதிர்ச்சி அடைந்த லாவண்யா, ஏன் எதற்கு என்று கேட்காமலேயே 'முடியாது' என்று முகத்தில் அடித்தாற் போல் கூறிவிட்டு வெளியேறினாள்.

அட்வொகேட் ரமணி அவளைத் தினமும் வேலைக்குப் போகும்போது சந்திப்பான். ஓரிரு விநாடியாவது தயங்கி நின்று பேசாமல் இருவரும் மேலே நடப்பதில்லை. தன் மனம் அவனிடம் மட்டும் இத்தனை பரிவு காட்டுவது ஏன் என்று லாவண்யாவுக்கு இதுவரை புரியவில்லை. இப்போது அவள் தன் தகப்பனார் உடல் நிலை சரியாக இல்லை என்பதாக ரமணி கூறத்தான் தெரிந்து கொண்டாள். வெளிப் பார்வைக்கு அவர் சற்று இளைத்திருப்பது போல் அவள் உணர்ந்தாலும் உடம்புக்கு ஏதும் கவலைப்படும்படி இருக்கும் என்று நினைக்கவில்லை. ரமணி அந்தப் பேச்சை எடுத்த பிறகுதான், 'அம்மா பணம் வேண்டும் என்று கேட்டதற்கும் அப்பாவின் உடல்நிலைக்கும் ஏதாவது தொடர்பிருக்குமோ?' என்று எண்ணிக் கலக்கம் அடைந்தாள் லாவண்யா.

சிம்மக்கல் சுந்தரேசனும் மதுரை மாநகரில் ஒரு கைடுதான். லாவண்யா அரசாங்க சுற்றுலா இலாகாவின் ஆதரவு பெற்ற அதிகாரபூர்வமான கைடு என்றால் சுந்தரேசன் தனக்குத்தானே அதிகாரம் வழங்கிக்கொண்ட வழிகாட்டி. பல்வேறு மாநிலங்களிலிருந்து டூரிஸ்ட் பஸ்களில் வந்திறங்கும் பயணிகளுக்கு வழிகாட்டி, அவர்கள் கால், அரை என்று சேகரித்துக் கொடுப்பதைப் பெற்றுக்கொள்வான். எதிர்பாராத விதமாக ஒரு பெல்ஜிய மாதுக்கு மதுரையைச் சுற்றிக் காட்டும் வாய்ப்பு அவனுக்குக் கிட்டியது. கோபி அய்யங்கார் ஹோட்டல் சிப்பந்தி ஒருவர் இந்த விஷயத்தை அறிந்தபோது வைரம் பட்டை தீட்டுவதற்கும் வியாபாரத்துக்கும் பெல்ஜியம் உலகப் பிரசித்தி பெற்றது என்று சொல்லி வைத்தார். அந்த விநாடியிலிருந்து சுந்தரேசன், பெல்ஜிய மாதின் மோதிர விரலில் மின்னிய பெரிய வைரத்தின் ஞாபகமாகவே இருந்தான்.

மறுநாள் பெல்ஜிய மாமியைச் சந்திக்கும் முன் லாவண்யாவிடம் அந்நாட்டைப் பற்றியும் வைரங்கள் பற்றியும் சில விவரங்களைக் கேட்டறிந்து கொண்டு போனான். பெல்ஜியக்காரி தங்கியிருந்த ரயில்வே ரிடயரிங் ரூமை அவன் அணுகியபோது டிக்கெட் கவுண்டர் முன்னால் இருந்த நீண்ட க்யூவில், 'க்யூ' மொட்டை நின்று கொண்டிருக்கக் கண்டான். 'க்யூ' மொட்டைக்கு ரேஷன் ஷாப், ஸ்டேட் பாங்க், என்று பல இடங்களில் மற்றவர் சார்பில் க்யூவில் நின்று மணிக்கு இவ்வளவு என்று காசு வாங்குவதே தொழில். அவன், சிம்மக்கல் சுந்தரேசன் தரவேண்டிய இரண்டு ரூபாயை நினைவூட்டி எல்லோர் முன்னிலையிலும் அவமானப்படுத்தினான். இரண்டு ரூபாயை அவனிடம் வீசிவிட்டு பெல்ஜியம் மாமி அறைக்குப் போய் அவளை அழைத்துக் கொண்டு சென்று, ஊரைச் சுற்றிக் காட்டித் தன் அரை குறை ஆங்கிலத்தில் எல்லாம் விளக்கினான் சுந்தரேசன். அறைக்குத் திரும்பிய அந்த மாது பத்து ரூபாய் நோட்டுடன் தன் விரலில் அணிந்திருந்த மோதிரத்தையும் கழற்றிச் சுந்தரேசனிடம் தந்தாள். "இது உனக்கு ரொம்பப் பிடித்திருப்பதாய்ச் சொன்னாயல்லவா? வைத்துக்கொள்" என்றாள்.

'தனக்கு இப்படி ஓர் அதிர்ஷ்டமா?' - உரித்த வேர்க்கடலை அளவு வைரத்தை உடைய மோதிரத்தை இடுப்பில் பத்திரப்படுத்திக்கொண்ட சிம்மக்கல் சுந்தரேசன், கனவில் குழந்தை சிரிப்பது போல் சிரித்துக்கொண்டு நடந்தான்.



# மதுர நாயகி

பி.வி.ஆர்

மதுரைக் கோயிலுள்ள கோபுரங்களில் மிகவும் உயரமான கோபுரம் தெற்குக் கோபுரம். 160 அடி. அடித்தளத்தில் நீளம் 108 அடி. அகலம் 67 அடி. கோபுரத்தில் 1511 சுதைகள் உள்ளன.

திருப்பணி வேலைக்குப் பிறகு, இன்று வர்ணப் பூச்சுடன் விளங்கும் இக் கோபுரத்தை கி. பி. 1559ல் சிராமலை செவ்வந்திச் செட்டியார் கட்டுவித்தார்.

## 3

ரமணியின் தாயார் சாவித்திரி, சின்னமனூரில் பிறந்து தஞ்சாவூரில் புகுந்தவள். 'தஞ்சாவூர்லே பெண்ணைக் கொடுப்பதா?'

'மதுரைக்காரனோட சம்பந்தமா?' என்று ஒரு ஜில்லாவை இன்னொரு ஜில்லா புரிந்து கொள்ளாமல் வெறுத்த காலம் அது. ஆனால் தமிழ் பேசுகிற ஜில்லாக்கள் அனைத்துமே ஒரு பெரிய வட்டம்தான், அவ்வட்டத்தினுள் எல்லோருமே ஒன்றுதான் என்று நினைத்தவர் சின்னமானூர் மிராசுதார் செல்லப்பா. மண்ணின் தரத்தால் செடிகொடிப் பயிர்கள்தான் பாதிக்கப்படும், மனிதனுடைய குணத்தை அது நிர்ணயிக்காது என்று பரிபூரணமாக நம்பித் தம் ஏழாவது பெண் சாவித்திரியை, அதிக சீர்செனத்தி ஏதுமின்றி, உமையாள்புரம் கணபதியின் பிள்ளை கைலாசத்துக்குக் கொடுத்தார்.

சாவித்திரி புகுந்த வேளையோ, என்னவோ புகுந்த வீட்டில் பிளவு ஏற்பட்டது. தம்முடைய இரண்டு தமையன்மார்கள், 'மைனர்' வேஷம் போட்டுக் கொண்டு சில்க் ஷர்ட்டில் அத்தரை அள்ளி வீசிய வண்ணம் பணத்துடன் சகல விளையாட்டுக்களையும் ஒன்று விடாமல் விளையாடிச் சொத்தைக் கரைத்து, கைலாசத்தின் ஆத்திரத்தைத் தீ மூட்டி வளர்த்தது. இப்படியே போனால் தம் பங்குக்குப் பழைய பித்தளை





மருந்து கடைக்காரர்: (புத்தக வியாபாரியிடம்) இந்தப் புத்தகம் நல்லா இருக்குமா ?

புத்தக வியாபாரி: நான் படித்துப் பார்க்கல்லீங்க !

மருந்துக் கடைக்காரர்: படித்துப் பார்க்காமல் எப்படி விற்கிறீங்க? புத்தகம் நல்லதா இல்லையா என்று படித்துப் பார்த்தால் தானே விற்பனை செய்ய முடியும் ?

புத்தக வியாபாரி: அப்படியானால் வருகிற ஒவ்வொரு மருந்தையும் சாப்பிட்டுப் பார்த்துவிட்டுத் தான் நீங்க விற்கிறீங்களா ?

- குறும்பன்

---

அண்டாக்களும், இரைற்றுத் தாம்புக்கயிறும் தான் எஞ்சி நிற்கும் என்று அவர் பயந்து அப்பாவிடம் முறையிட்டார். ஆனால் அவர் முறையிட்ட வேளை சரியில்லை. பிள்ளைகள் அப்பன் வார்த்தையை லட்சியம் செய்கிற வயதை மீறிப் போயாகி விட்டது.

பெட்டிச் சாவியைக் கைலாசம் பறித்துக் கொண்டார். கணவர்களின் சேஷ்டைகளை நினைத்து மனைவிகள் அவர்களை வெறுத்த போதிலும், மைத்துனன் கைலாசம் சர்வாதிகாரியாக நடந்து கொள்ளுவதை ஆட்சேபித்தார்கள். இசுகிசுவாக ஆரம்பித்த முணுமுணுப்புக்கள் மெள்ள மெள்ள வலுத்து வலுத்துக் கடைசியில், சகோதர பாசத்துக்குச் சவாலாக முடிந்தன.

உயிரோட இருக்கும்போதே பிள்ளைகளுக்கு இருக்கிற பிதிரார்ஜித ரொட்டியைத் துண்டு போட்டுக் கொடுத்தார் கணபதி. கைலாசத்துக்கு ஐந்து வேலி நிலமும், பன்னிரண்டாயிரம் ரூபாய் ரொக்கமும் விழுந்தது.

சொத்தை வாங்கிக் கொண்ட கைலாசத்துக்கு, தொடர்ந்து பிதிரார்ஜித வீட்டில் இருக்கப் பிடிக்கவில்லை. அப்படி இருப்பது கேவலம் என்று எண்ணினார். சாவித்திரியுடன் சேர்ந்து மத்தாப்புக் கொளுத்திப் பட்டாஸ் விட, தலை தீபாவளிக்குச் சின்னமானூர் சென்ற அவர், வாழ்க்கைக்கு என்ன செய்யலாம், எங்கே பிழைப்பை ஆரம்பிக்கலாம் என்று யோசனை செய்தார்.

சாவித்திரியின் இரு சகோதரிகளின் கணவர்களும், சாவித்திரியின் மாமாவும் அவருடைய மனத்தில் திடீரென்று ஒரு யோசனையை, அவர்கள் அறியாமலேயே கொடுத்தார்கள்.

மேற்சொன்ன மூவரும் டாக்டர்கள். மூன்று பேரும் மதுரையில் தொழில் நடத்துகிறார்கள். அவ்வளவுதான்!

தலைதீபாவளிக்குச் சென்றவர், ஐப்பசிக் கடைசியிலேயே மதுரையில் தெற்கு மாசி வீதியில் ஒரு மருந்துக் கடை ஆரம்பித்தார். மஞ்சனக்காரத், மால் தெருக்களில் அடைந்து வாழும் மக்கள் எல்லோரும் மூன்று டாக்டர்கள் சொன்ன மருந்துகளை 'மீனாட்சி மெடிக்கல் ஸ்டோர்ஸ்'ஸில் வாங்கினார்கள்.

நாளடைவில் கைலாசம் உமையாள் புரத்தை மறந்தார். மதுரையை நம்பிப் பிழைக்க வந்தவர்கள் யாருமே வீண் போனதில்லை. அவர்களுடைய சக்திக்கு அப்பால் மீனாட்சியின் அருளும் திருவிளையாடல் நாயகனின் பார்வையும் இருக்கின்றன என்று எல்லோரும் கூறுவது கைலாசத்தின் விஷயத்தில் நூற்றுக்கு நூறு உண்மையாயிற்று.

அந்த புதிதில் மஞ்சனக்காரத்தெருவில் ஒரு சௌராஷ்டிர ஐயர் வீட்டில் குடியிருந்த கைலாசம், சில வருடங்களிலேயே வளர்ந்து கொண்டு வரும் சொக்கி குளம் பகுதியில் ஒரு வீட்டைக் கட்டினார். அப்போது தான் ரமணி பிறந்தான்.

வீடு கட்டினால் பிள்ளை பிறக்கும் போல் இருக்கிறது என்று எண்ணிய கைலாசம், தொடர்ந்து வீடுகள் கட்டி லாபத்தில் விற்க ஆரம்பித்தார். ஒரு பக்கம் மருந்துகள் நோயாளிகளின் உடல்களில் சென்று கொண்டிருக்க இன்னொரு பக்கம் செங்கல்லும் சிமெண்டும் பூமிக்குள் சென்று மேலே மேலே வளர்ந்து கொண்டிருந்தன.

இரண்டு வருடங்களுக்கு முன் ஒருநாள் கைலாசம் திடீரென்று மாரடைப்பில் காலமானார். அவருடைய கடை மருந்து அவருக்கே பிரயோசனப்படவில்லை. அப்போது ரமணிக்கு இருபத்தெட்டு வயது. சொக்கிக் குளத்தில் இரண்டு, நரிமேட்டில் ஒன்று, ஷெனாய்நகரில் ஒன்று, அரசரடியில் இரண்டு என்று மொத்தம் ஆறு வீடுகள் கைலாசத்துக்கு வந்து சேர்ந்தன. வீடு கட்டினால் குழந்தை பிறக்கும் என்று நம்பின கைலாசம் கடைசியில் மனத்தைத் தேற்றிக் கொண்டார். ஒரு விதத்தில் இரண்டாவது மூன்றாவது பிள்ளைகள் பிறக்காமலிருந்ததும் நல்லதுக்குத்தான் என்று நினைத்தார். அனாவசியமான பாகப் பிரிவினைச் சண்டைக்கு அவரே ஏன் காரணமாக இருக்க வேண்டும்?

ரமணியின் தாயார் சாவித்திரிக்கு இப்போது வயது நாற்பத்தெட்டு. கணவர் மறைந்தது ஒரு பெரிய இழப்பாக அவளை நோகச் செய்தாலும், இப்படிப் போய் விட்டாரே என்று அவள் மாய்ந்து போய் நிற்கவில்லை. சில பெண்களுக்கு நேர்ந்து விடும் விதவைக் கோலம், விதி காட்டும் ஒர வஞ்சனை என்று கருதினாள்.

மனைவி மறைந்து கணவன் தவிக்கலாமென்றால் கணவன் இறந்து மனைவியும் தவிக்கத்தான் வேண்டும், அதுதான் நியாயம் என்றும் சிற்சில சமயங்களில் அவள் தன்னைத் தானே தேற்றிக் கொள்ளுவாள்.

இதுநாள் வரையில் அவளும் சரி, ரமணியும் சரி, வீட்டில் எந்தப் பொறுப்பையும் உணர்ந்து அறிந்ததில்லை. நம்பிக்கைக்குப் பாத்திரமான இரண்டு பேர்கள் மருந்துக் கடையை நடத்தி வந்தார்கள். இருவரும் கடையைச் சூறையாடாமலிருக்கக் கைலாசம் ஏற்கெனவே ஒரு வழி செய்திருந்தார். இருவருக்கும் மாதச் சம்பளத்தைத் தவிர ரூபாயில் பதினைந்து பைசா நிகர லாபத்தில் உண்டு என்று ஒரு ஜனவரியில் புத்தாண்டுப் பரிசாகப் பிரகடனம் செய்தார். அதிலிருந்து லாபம் மேலும் அதிகமாகியது.

# பொன்னான வாய்ப்பு



காஞ்சி மாநகரில் கோயில் கொண்டு அருள் பாலிக்கும் அன்னை ஸ்ரீ காமாட்சி அம்மன் ஆலய விமானத்துக்குப் பொன்தகடு வேயும் நற்பணியில் பங்கு கொள்வீர். இதற்கான உங்களது நன்கொடைகளை 650க்கும் மேற்பட்ட இந்தியன் பாங்க் கிளைகளில் செலுத்தி, ரசீது பெற்றுக் கொள்ளுங்கள்.

நன்கொடைகள் ரூ. 100, ரூ. 50, ரூ. 25, ரூ. 10, ரூ. 5 என்ற மதிப்பில் ஏற்றுக் கொள்ளப்படும்.



## இந்தியன் பாங்க்

(இந்திய அரசுக்கு முற்றிலும் உடைமையானது)
தலைமை அலுவலகம்: 17, வடக்கு கடற்கரைச் சாலை
சென்னை 600001

FDS IB 2542 TAM

பாட்டனாரின் முதுகுவலி, பாட்டியின் உடல்வலி,
அம்மாவின் தலைவலி,
அப்பாவின் ஜலதோஷம், மகனின் சுளுக்கு
அனைத்துக்கும்
நிவாரணம் அளிக்க
இல்லந்தோறும்
இருக்க வேண்டிய
நல்ல மருந்து.
















# அமிர்தாஞ்சனம்

வலி, ஜலதோஷம், சுளுக்கு ஆகியவற்றிற்கு சிறிதளவு அமிர்தாஞ்சனம் தடவுங்கள். அதன் சிறப்பான பத்து மருந்துகளின் கலவை வியக்கத்தக்க வகையில் உங்களுக்கு நிமிஷத்தில் நிவாரணமளிப்பதை உணர்வீர்கள்.

சிக்கனமான ஜாடி, சிறிய பாட்டில் மற்றும் மலிவு விலையில் அடக்கமான டப்பாவிலும் கிடைக்கிறது.

அமிர்தாஞ்சனம் 80 ஆண்டுகளுக்கு மேலாக நம்பகமான குடும்ப நிவாரணி.

அமிர்தாஞ்சன் லிமிடெட்.

AM-1254

இந்த ஏற்பாட்டினால் கைலாசம் இறந்த பிறகும் மருந்துக் கடை சாவித்திரிக்கு ஒரு பிரச்னையையும் ஏற்படுத்தவில்லை. அவ்வப்போது அவளே காரை ஓட்டிக் கொண்டு போய் மேற்பார்வை பார்த்தாள்.

வாடகைக்கு விட்ட ஐந்து வீடுகளிலிருந்து கிட்டத்தட்ட மாதம் இரண்டாயிரம் ரூபாய் வந்தது. கடையிலிருந்து லாபம் வேறு. பாங்கியில் பணம் முடங்கிக் கிடந்தது.

சாவித்திரி அனுபவிக்கப் பிறந்தவள். சின்னமானூரில் எஸ். எஸ். எல். ஸி. வரை படித்தவள், மதுரைக்குக் குடி வந்த பிறகு தன் கல்வி ஞானத்தை விருத்தி செய்து கொண்டாள். நாளடைவில் ஆங்கிலத்தில் சரளமாகப் பேசவும் முடிந்தது. ஹார்வி மில், டி. வி. எஸ். போன்ற ஸ்தாபனங்களில் பெரிய பதவிகளை வகிப்பவர்களின் குடும்பங்கள் அறிமுகமாயின. லேடீஸ் கிளப்பில் அங்கத்தினரானாள். இயல்பான தேகவாக்கோ அல்லது ஒரே குழந்தையைப் பெற்றதனாலோ என்னமோ அவளுடைய இடையும் வயிறும் அசிங்கமாகப் பருத்து வீங்கி, முன்னுக்கு நிற்கவில்லை. இது டென்னிஸ் ஆடவும், அதில் வெற்றி பெறவும் உதவி செய்தது.

கைலாசம் உயிருடன் இருக்கும்போதே, மிஸஸ் சாவித்திரி கைலாசம் மதுரையில் ஒரு 'தெரிந்த' புள்ளியாகி விட்டாள்.

• • •

**அ**ன்று மாலை நாலரை மணிக்கு, ஹாலில் ஒரு சோபாவில் உட்கார்ந்து பத்திரிகை ஒன்றைப் புரட்டிக் கொண்டிருக்கையில் திடீரென்று ரமணி பிரவேசித்தான்.

''அம்மா இன்னும் புறப்படவில்லையா?'' என்று கேட்டான் அவன்.

''அஞ்சு மணிக்குப் புறப்படறேன்.''

''கேஸ் ஜெயிச்சுடுத்து.''

''சரி.''

சாவித்திரிக்குப் பிடிக்காதது கறுப்பு. அதுவும் கறுப்புத் துணி. அந்தத் துணியைப் போடுகிறவர்கள் யாரா யிருந்தாலும் அவள் ஒதுங்கிக்கொள்வாள். ரமணி சின்னக் குழந்தையாக இருந்த நாளிலிருந்து அவள் தன்னுள் ஓர் ஆசையை வளர்த்து வந்தாள். தன் பிள்ளை, அக்காக்களின் கணவர்களைப் போல், மாமாவைப் போல் ஒரு டாக்டராக வர வேண்டும். பெரிய டாக்டராக வேண்டும்! இந்த ஆசையின் உந்தலில் குழந்தையை எப்போதும் வெள்ளை நிஜார், வெள்ளை ஷர்ட்டிலேயே பொதிந்து வைத்தாள். ரமணி தான் துணியின் நிறத்தை மாற்றி மாற்றிக் கடைசியில் அவளுடைய எதிர்ப்புக்களை லட்சியம் செய்யாமல் கறுப்புக் கோட்டையே சரண் அடைந்தான்.

பிள்ளை தன் ஆசையை நிறைவேற்றாமல் வக்கீலானதால், அவளுக்கு அந்தத் தொழில் மீதே ஒரு வெறுப்புப் பிறந்தது. இது நியாயமற்ற வெறுப்பு என்று ரமணி எத்தனையோ தடவைகள் மண்டையில் அடித்துச் சொல்லியும் அவளுடைய மண்டை அதை ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால் ரமணி பிடிவாதத்துக்குப் பெயர் போனவன். இன்று இல்லாவிட்டால் இன்னொரு நாள் அம்மா மனம்



முத்து: அந்தக் கடையில் இரும்புப் பெட்டியை உடைச்சியே எத்தனை கிடைத்தது?

கந்தன்: அதை ஏன் கேட்கிறாய்? மூன்று இரும்புப் பெட்டிகளை உடைச்சேன். ஒன்றுமே இல்லை.

முத்து: மூன்று இரும்புப் பெட்டியை வைச்சிருக்கிறவர் எப்படி ஒன்றுமில்லாமல் இருக்க முடியும்?

கந்தன்: அதுவே ஓர் இரும்புப் பெட்டி விற்பனை செய்யும் கடை என்று பின்பு நான் தெரிந்தது.

- லலிதா செல்லப்பா

---

மாறுவான் என்று நம்பினாள். இந்த நம்பிக்கையில், கோர்ட்டைப் பற்றியும், வழக்குகளைப் பற்றியும் தினந்தோறும் அவளிடம் பேசுவான்.

''பெரிய கேஸ் அம்மா!''

''கேஸிலே பெரிசு என்ன சிறிசு என்ன... எல்லாம் ஒண்ணுதான். போய்க் காப்பி டிபன் சாப்பிடு'' என்றாள், மூக்குக் கண்ணாடியைத் துடைத்தவளாய்.

''கேஸ் என்ன கேஸ்னுகூடக் கேட்க மாட்டியா?''

''எனக்குத்தான் அக்கறை இல்லேன்னு உனக்குத் தெரியுமே, ரமணி?''

''என்னிக்குத்தான் நீ உன் மனசை மாத்திப்பே?''

''மாறாது. நான் ஏன் மாத்திக்கணும்?''

''இன்னொரு சமாசாரம்.''

''என்ன?''

''பலராமனுக்கு உடம்பு சரியில்லை. கான்ஸர்.''

''நீ டாக்டருக்குப் படிச்சிருந்தால் அவரை ஒரு கை பார்த்திருக்கலாம்... அது சரி. நீ இன்னும் லாவண்யாவோடே பழகிண்டிருக்கியா?''

''அவருக்கு ஏதேனும் நாம் உதவி செய்யணும்.''

''நான் கேட்ட கேள்விக்குப் பதில் இல்லே...!''

''கோட்டை. அடுப்பிலே உழைச்சுக் கடைசியிலே என்ன நிலைக்கு வந்துட்டார், பாரு.''

''அது அவர் தலை எழுத்து.''

''தலை எழுத்துன்னு நாம் எப்படியம்மா விடறது?... அந்த மாதிரி அப்பா விட்டிருந்தா இன்னிக்கு உமையாள்புரத்திலே நீ யார் வீட்டிலேயாவது சித்துக் காரியம் செய்ஞ்சுண்டிருப்பே!... நான் 'ரெண்டு சாதா, ஒரு மசாலா'ன்னு ஆர்டர் கொடுத்திண்டிருப்பேன்... பலராமன் உன் அண்ணா கூடச் சின்னமானூரில் கோலி ஆடினவர்.''

''என் அண்ணா கூடக் கோலி ஆடினவாளுக்கும் கில்லி ஆடினவாளுக்கும் உதவி செய்யறதுன்னு ஆரம்பிச்சா இருக்கிற ஆறு வீடு போராது.''

''உன்னைப் பணத்தாலே உதவி செய்யச் சொல்லலை.''

''பின்னே?''

''நீதான் லேடீஸ் கிளப் வைஸ்-பிரஸிடெண்ட்டாச்சே... கிளப் மூலமா ஏதேனும்

செய்யறது! ரோடரி, லயன் கிளப்பெல்லாம் செய்யலேயா?''

''பலராமனை அமெரிக்காவுக்கு அனுப்பணும்கிறியா?''

''இல்லே. மெட்ராஸ்வரையில் போதும்.''

''என்னாலே எதுவும் பிராமிஸ் பண்ண முடியாது.''

'' 'ஆகட்டும், பார்க்கலாம்'னு நீ திருவாய் மலர்ந்து அருளினாலே போதும் அம்மா.''

''சரி, ஆகட்டும், பார்க்கலாம்... போய்க் காப்பி டிபனைச் சாப்பிடு.''

''நீ சாப்பிட்டாச்சா?''

''கிளப்பிலே அஞ்சு மணிக்கு ஒரு பார்ட்டி.''

''வெறும் காப்பி?''

''குடிச்சாச்சு...''

ரமணி மௌனமாக நகர்ந்தான்.

''ரமணி!''

''என்னம்மா?''

''இப்போ உன் வயசு முப்பது.''

''தெரியும் அம்மா, உனக்கும் எனக்கும் பதினெட்டு வயசு வித்தியாசம்.''

''நீ பிறக்கறப்போ உன் அப்பாவுக்கு இருபத்து நாலு வயசு. ஒரு வீட்டையே கட்டி முடிச்சாச்சு.''

''அந்தக் காலத்திலே கண்டிராக்டர் எல்லாம் ரொம்ப வேகமா வேலையை முடிப்பா..''

''இவ்வளவு பணக்கார வீட்டுப் பிள்ளை ஏன் இன்னும் கல்யாணமாகாம நிக்கறான்னு இந்த மதுரையே கேட்கிறது.''

''மதுரைக்கு வேறே வேலை என்னம்மா? எதையாவது அது கேட்டுண்டே யிருக்கும்.''

''அப்பா இருக்கும்போதே அவர் ஆசைப் பட்டார்.''

''இப்ப நீ படறே.''

''ஆனா நான் உன்னைப் பற்றி எந்த ஆசையும் வைச்சுக்கிறது இல்லேன்னு உனக்குத் தெரியுமே.''

''அப்போ என்ன உணர்ச்சியிலே நீ இப்படித் தண்ணீரா உருகறே?''

''கடமைன்னு வைச்சுக்கோயேன்..''

''யோசிக்கிறேன்.''

''பெண்களுக்கு மட்டும்தான் காலா காலத்திலே கல்யாணம் ஆகணும்னு நினைச்சுக்காதே. என்னைக் கேட்டா, சமூகம் பொறுப்புள்ள சமூகமா இருக்கணும்னு, பிள்ளைகளுக்கு இருபத்திரண்டு இருபத்தி மூணு வயசிலேயே கல்யாணமாயிடணும்.''

''மெதுவாப் பேசு. யாராவது ஃபேமிலி பிளானிங் ஆபீஸர் காதிலே விழுந்துடப் போறது. அப்புறம் அவருடன் நீ வாக்குவாதத்துக்குத் தயாராகணும்!''

''உனக்கு எல்லாம் விளையாட்டாப் போச்சு, இல்லே?''

''என்ன செய்யணும்னு நீ இப்ப சொல்றே?''

''சீக்கிரத்திலே கல்யாணம் பண்ணிக்கோ. பெரிய பெரிய இடத்திலிருந்தெல்லாம் ஜாதகம் வந்திருக்கு. நீ தலையை ஆட்டினாத்தான், நான் ஜோஸியரை வரவழைப்பேன்!''

''எனக்கு நம்பிக்கை யில்லே.''

''தலையாட்டுவேன்னு கூட நம்பிக்கை உனக்கே இல்லியா?''

''இல்லே, ஜாதகத்திலே!''



பாபு: ஏம்பா விபத்து நடந்திருக்கு. இப்ப போய்ச் சாக்லெட் தரியே?

கண்டக்டர்: நம்ப பஸ்ஸில் இது இருபத்தைந்தாவது விபத்துங்க. வெள்ளி விழா கொண்டாடறேன். அதுக்குத்தான் சாக்லெட். - லலிதா செல்லப்பா

''அப்போ, அம்மன் சன்னதியிலே பூப் போட்டுப் பார்ப்போம்.''

''நான் பூப் போட்டுப் பார்த்தாச்சு'' என்றான் ரமணி.

''என்ன சொன்னே?''

''நல்ல பூவாவே கிடைச்சுட்டது. ஆனால் அவ இன்னும் பூக்கடைக்கே போகலே.''

''யாருடா அவள்? லாவண்யா தானே?''

''ஆமாம்.''

''சமையல்காரன் பொண்ணு!''

''இல்லே. அவளுடைய அப்பா சமையல் வேலை பார்க்கிறார்... அவருக்கும் நல்ல பூ கிடைச்சா, அவ பிள்ளையோட அப்பன் ஒரு வக்கீல்... பாட்டி 'லேடீஸ் கிளப்' வைஸ் பிரஸிடெண்ட்.''

''எனக்குத் துளிக்கூட விருப்பமில்லே... ஏன் நீ உன்னோட ஸீனியரோட பெண்ணையே பண்ணிக்கக் கூடாது?''

''அதிலே ஒரு சின்னச் சிக்கல் இருக்கு.''

''என்ன அது... வேணும்னா நானே உன் ஸீனியரைப் பார்க்கிறேன்.''

''பிரயோசனமில்லே. உன்னாலே தீருகிற சிக்கல் இல்லே!''

''விவரமாச் சொல்லேன்.''

''என் ஸீனியர் ராமையாவுக்குத் தம் ஜூனியர் மாப்பிள்ளையா வரணும்னு கொள்ளை ஆசை. ஆனால் பெண் கிட்டே கேட்கவே பயப்படறார்... முன்னே ஒரு தடவை ஓர் என்ஜினியரைப் பற்றி அவ கிட்டே பிரஸ்தாபித்தபோது அந்தப் பெண் என்ன சொன்னா தெரியுமா?''

''நான் எங்கே அங்கே இருந்தேன் தெரியறதுக்கு?''

'' 'நான்தான் ஒருத்தனை செலக்ட் பண்ணுவேனே தவிர இன்னொருத்தன் என்னைச் செலக்ட் பண்ண விட மாட்டேன்'னு சொன்னா!''

''சரி, அவளே உன்னை செலக்ட் பண்ணட்டுமே... மாசம் எட்டாயிரம் பத்தாயிரம்னு வர்றது. பிக்குப் பிடுங்கல் இல்லாத குடும்பம்... எனக்கு உன் தொழில் பிடிக்கிறதோ, இல்லையோ, அவருக்கு அப்புறம் அவரோட கேஸ் கட்டெல்லாம் உன்கிட்டே வரும்!''

''அவ எப்படியம்மா என்னை செலக்ட் பண்ணுவா?''

''ஏன்?''

''அந்தக் கதை உனக்குத் தெரியாதா? சொல்றேன் கேளு!''

''இப்ப டயமாயிடுத்து. ராத்திரி சாப்பிடறபோது சொல்லு...''

சாவித்திரி எழுந்தாள். ஒரு நமுட்டுச் சிரிப்புடன் அவனைப் பார்த்துக் கொண்டே, ரமணியும் நகர்ந்தான்.

(தொடரும்)

சிரகிரி வேலவன் சீக்கிரம் வருக!

# அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி கோயில்

**சென்னிமலை :: ஈரோடு வட்டம்**

அன்புடையீர்,

தினசரி பாராயணம் செய்யும் சஷ்டி கவசம் பாடப்பெற்றதும் ஞானசம்பந்தரால் பாடப்பெற்றதும் அருணகிரிநாதரால் சிறப்பாக பாடப்பெற்றதும் அருணகிரிநாதர் விசேட தரிசனம் பெற்று படிக்காசு பெற்றதுமான தலமும் தன்னை முறையாக சஷ்டி விரதம் அனுசரித்து வழிபடும் அன்பர்களுக்கு ஆண்மகவு அளித்து அருளும் கலியுக வரதனம் சென்னிமலை ஆண்டவருக்கு கோடி அர்ச்சனை தொடர்ந்து 29-8-'76 முதல் நடைபெற்று வருவதை விரைவில் பூர்த்தியாக அன்பர்கள் தவருது பங்கு கொண்டு முருகன் அருளுக்குப் பாத்திரராக அன்புடன் வேண்டுகிறோம்.

**சகஸ்ரநாமம் 1க்கு கட்டணம் ரூ. 15-00**

வெள்ளி டாலர், பட்டு விபூதியை பிரசாதமாக அனுப்பி வைக்கப்படும்

போன் :
அலுவலகம் 23
மலைக்கோயில் 63

**எம். தெய்வகுமார், பி. ஏ., பி. எல்.**
செயல் அலுவலர்



## கண்ணுடியின்றி கூர் பார்வை பெறலாம்!



**உங்கள் கண் வைத்தியரை ஆலோசனைக்கு அணுகுங்கள்**

உங்களுக்கு இதைவிட மட்டற்ற மகிழ்ச்சி தரக்கூடிய ஒரு செய்தியும் வேறு உண்டோ!

**'காண்டாக்ட் லென்ஸ்'களை உபயோகியுங்கள்.**

இந்த காண்டாக்ட் லென்ஸ்'கள் கிட்டப்பார்வை, தூரப்பார்வை மற்றும் அப்பாகிக் (காடராக்ட் ஆப்ரேஷனுக்குப்பின்) கெராடோ கோனஸ், அனிஸோமெட்ரோபியா, அனிரிகோனியா; பாலிபோபியா, போன்ற பார்வை குறைபாடு உடையவர்களுக்கு மிகவும் சிறந்தது.

'காண்டாக்ட் லென்ஸ்'களை வெகுசுலபமாக நீங்களே உங்கள் கருவிழிகளில் பொருத்திக்கொள்ளலாம். . . கழற்றியும் விடலாம்—சில நாட்கள் பழகிய பின்! உங்கள் விழிகளில் பொருத்தப்பட்ட இச்சிறு 'காண்டாக்ட் லென்ஸ்'கள் மற்றவர்கண்களுக்கு தெரியாது. ஆகவே உங்கள் எழில் மிகு முகத் தோற்றத்தில் எவ்வித மாறுதலும் இல்லை!

மற்ற விபரங்களுக்கு

**ஆசியா காண்டாக்ட் லென்ஸ் லாபரெட்டரி**
4/1, ஆண்டர்ஸன் ரோடு,
சென்னை-600 006. போன் : **87866**



நான் ஒரு மெடிக்கல் ரெப்ரஸெண்டேடிவ்.

வெள்ளை உடை உடுத்தி, டை அணிந்து, மருந்துச் சாமான்கள் அடங்கின கறுப்பு கைப்பையைச் சுமந்துகொண்டு ஊர் ஊராய்ச் சுற்றுவது என் வேலை —

என் அலங்காரத்தையும், கைப் பையையும் பார்த்தாலே நான் இன்ன வேலை செய்பவன் என்று என் முகத்தில் எழுதி ஒட்டியிருக்கிறது என என் நண்பர்கள் கேலி செய்வதுண்டு.

பி. எஸ்ஸி. பாஸ் பண்ணினதும் 'பாங்க் வேலை வேண்டும்' என்று ஒத்தைக் காலில் நின்றவன் தான் நானும்.

இரண்டு வருஷங்கள் அந்த லட்சியத்தின் காரணமாய் வீட்டில் ஈ ஓட்டின பிறகே 'லட்சியமாவது, லொட்சியமாவது — எந்த வேலையானாலும் பரவாயில்லை — வீட்டில் தண்டச் சோறு சாப்பிட்டது போதும்' என்ற ஞானோதயம் வந்தது.

இந்த மருந்துக் கம்பெனியில் வேலை கிடைத்ததும் அதிருஷ்டம் தான் —

நல்ல சம்பளம், பாட்டா, குறை சொல்லும்படி ஒன்றும் இல்லை.

ஆனால் இப்படி ஊர் ஊராய்ச் சுற்றுவதும் கண்ட கண்ட உணவை உட்கொள்ளுவதும், சிடுமூஞ்சி டாக்டர்கள் சிலரின் காரணமில்லாத வசவுகளைத் தாங்கிக் கொள்வதும் இப்போதெல்லாம் அலுப்பைத் தந்து அக்கடா என்று ஒரே ஊரில் இருக்க மாட்டோமா என்ற நப்பாசை எழுகிறது.

இந்த டவுனுக்கு நான் இன்று காலைதான் வந்தேன்.

ஹோட்டலில் அறை எடுத்துப் பெட்டியை வைத்தவன், இதுவரையில் எட்டு டாக்டர்களைப் பார்த்தாயிற்று. பாக்கி இருப்பவர்கள் நாளைக்குத்தான்.

மாலை மணி ஐந்தைத் தொடுகையில் அறைக்கு வந்தேன். பையனைக் கூப்பிட்டுக் காப்பி கொண்டு வரச் சொல்லி விட்டுப் படுக்கையில் சாய்ந்தேன்.

காப்பி வந்தது. குடித்துவிட்டுத் தூக்கம் போட்டேன்.

மறுபடியும் கண்களைத் திறந்து பார்த்த போது மணி ஆறே கால்.

தூங்கினதில் அலுப்பு ஓரளவுக்குப் போய் இருந்தது.

முகத்தைக் கழுவினவனுக்குச் சினிமா போனால் என்ன என்று தோன்றியதால் கீழே இறங்கி ஒரு ரவா தோசை சாப்பிட்டு விட்டு எதிர்சாரியில் இருந்த படக் கொட்டகைக்குள் நுழைந்தேன்.

# தாய்மை

புதுப் படம்தான். சென்னையில் 'அடிதடி' அமர்க்களத்துடன் ஓடிக் கொண்டிருக்கும் ஒரு பிரபல கதாநாயகன் படம்.

பால்கனிக்கு டிக்கெட் வாங்கிக் கொண்டு மாடிக்குப் போனேன்.

தரை மகா ஜனங்களின் ஆர்வம் நடுத்தர வகுப்பினருக்கு இல்லை போலும். பால்கனியில் பத்து, பன்னிரண்டு பேர்களுக்கு மேல் இல்லை.

இரண்டாவது வரிசையில் முதல் இருக்கையில் காற்று நன்றாகவருவதற்காகஅமர்ந்தேன்.

விளம்பர ஸ்லைடுகள் ஓடிக் கொண்டிருந்தன. 'எல்லாவித சிகை அலங்காரத்துக்கும் வருவீர் முனியாண்டி ஸலூனுக்கு' என்ற விளம்பரத்தின் 'புஸ்'ஸென்ற தலைமுடியுடன் ஒரு தலை தெரிந்தது. சொந்தக்காரனின் தலையா?

கென்னடி வறுகடலை — பட்டாணி கடை விளம்பரத்துக்காகத் தமிழகத்தின் முன்னணி நடிகை பல்லைக் காட்டிக் கொண்டிருந்தாள்.

ராமதாஸ் பூக்கடை விளம்பரத்தில் சமீபத்தில் வெளியான ஒரு வெற்றிப் படத்தின் காதல் காட்சி —

வரிசை வரிசையாய் ஓடிக் கொண்டிருந்த ஸ்லைடுகள் என் பொறுமையைச் சோதிப்பதை உணர்ந்தேன். இன்னும் மாடிப்படி விளக்கு அணைக்கப்படவில்லை.

மெயின் படம் ஆரம்பமானதும் தான் அணைப்பார்களோ?

மாடிப்படியில் உரத்த குரலில் பேசின வண்ணம் தடதடவென்று யாரோ வருவது என் கவனத்தைக் கவர்ந்தது.

இரண்டு பெண்கள் — வயது ரொம்ப இருக்காது. இருபத்து ஐந்து, முப்பதுக்குள் இருக்கும். மூத்தவளாகத் தெரிந்தவள் கையில் ஒரு குழந்தை — இன்னொருத்தியிடம் ஒரு பிளாஸ்டிக் கூடை.

''படம் ஆரம்பமாயிடுச்சா?'' மூச்சிரைக்கப் பேசிக் கொண்டே அவர்கள் விறுவிறு என வந்து முதல் வரிசையில் எனக்கு நேர் எதிரில் அமர்ந்தார்கள்.

''ஸ்லைடுதான் ஓடுது... நல்ல வேளை படம் ஆரம்பிக்கலைக்கா....'' அக்கா, தங்கையா?

''கூடையை அப்படி பக்கத்திலே வைச்சுக்க. தண்ணி, துணி எதனாச்சும் வேணும்னு எடுக்கத் தோதாயிருக்கும்.''

இருவர் கழுத்திலும் தங்க மாலைகளும், காதில் பட்டையாய் வெள்ளைக்கல் தோடும் பளிச்சிட்டன.

வழவழவென்று எண்ணெய் தடவி வாரின தலையில் பாதி கனகாம்பரம், பாதி கதம்பம் எனச் சூடியிருந்தனர்.

நியூஸ் முடிந்து படம் ஆரம்பமானது.

கதாநாயகனின் பெயர் திரையில் காட்டப்பட்டதுமே கீழே இருந்து 'ஹேய்' என்ற கரகோஷம் — கத்தல்.

சென்னையில் இந்தப் பைத்தியக்காரத்தனமெல்லாம் குறைந்து விட்டது. நடிகர் மோகத்தைப் பார்க்க வேண்டுமானால் இப்படிப்பட்ட ஊர்களுக்கு வர வேண்டுமோ?

முன்னால் இருந்த பெண்களுக்குக் கதாநாயகனிடம் தனிக் கவர்ச்சி இருந்தது. டைட்டில் முடிந்து படம் - கதாநாயகன் பாரவண்டி ஒன்றை இழுத்துக் கொண்டே பாடும் பாடலுடன் — ஆரம்பமானதும் இருவரும் சிரித்தும், நாணிக் கோணியும், தங்களுக்குள்ளேயே பேசிக் கொள்வதிலிருந்து அது தெளிவானது.

படம் தொடங்கிப் பத்து நிமிஷங்கள் ஆகி இருக்காது —

குழந்தை சிணுங்கத் தொடங்கியது.

''யம்மா....ம்மா....'' என்று தாயின் தாடையைத் தன்னைப் பார்த்துத் திருப்பியது.

''தே. சும்மாயிரு. பாபு. அங்கே பாரு.... எம்புட்டு அளகா ஆடுறாரு பாரு...'' குழந்தையின் கவனத்தை அவள் கதாநாயகனிடம் திருப்ப முயன்றாள்.

ஒரு வயசுக் குழந்தைக்கு அதெல்லாம் புரியவில்லை —

'ம்மா....ம்மா....' என்று விடாமல் சிணுங்கியது.

''தேவகி அந்தப் பால் புட்டியை எடு. அதுக்குள்ளார இவனுக்கும் பசி வந்திடிச்சு.''

பால்புட்டியைப் பையனின் வாயில் செருகிவிட்டு மீண்டும் படம் பார்ப்பதில் ஆழ்ந்து போனாள் அவள்.

பாலைக் குடித்த குழந்தை, 'ம்மா... பாப்பா ... த்தா ....'' என்று பேசத் தொடங்கியது.

சிறப்புச் சிறுகதை

# ஒரு கோணம்

சிவசங்கரி




இனிமேல் ரயில்வே இரண்டாவது வகுப்பு ஸ்லீப்பர் டிக்கட் வாங்கிய பிரயாணிகள் ரயில்வே ஸ்டேஷன்களில் உள்ள முதல் வகுப்பு வெயிட்டிங் ரூமில் படுத்துத் தூங்கலாம்.

-இந்துஸ்தான் டைம்ஸ் - பாபு

---

கொஞ்ச நேரத்தில் குழந்தைக்குப் படம் அலுத்து விட்டது. ''ம்மா....ம்மா....'' என்று மறுபடியும் உரக்க அழ ஆரம்பித்தது.

''பாலைக் குடிச்சிட்டு உறங்கக் கூடாது சனியன் — தேவகி — அந்தப் பொட்டலத்துலே பிஸ்கோத்து இருக்கு, எடு.''

பத்தே நிமிஷங்களில் பிஸ்கோத்தைக் காலி பண்ணின குழந்தைக்கு இருட்டைப் பார்த்தால் பயமாக இருந்ததோ என்னமோ —

''யம்மா....ம்மா...'' என்று பெரியதாகக் கத்த முற்பட்டது.

''இந்தா —'இங்க பாரு.... தோ பாபு... பாபு பையா....''

அம்மாவின் குலுக்கலும் கொஞ்சலும் சரிப்பட்டு வராமல் பையனின் கத்தல் பெரிசாகிப் போனது.

''தேவகி — இந்தா கொஞ்சம் வெளியே போய் வைச்சுக்கிட்டு வா, எந்திரு.''

படத்தைச் சுவாரசியமாகப் பார்த்துக் கொண்டிருந்த தங்கை போக மனசில்லாமல் எழுந்திருப்பது புரிந்தது—

வாசற் படியிடம் நின்று 'ஹோ.... ஹோ' என்று பையனைக் குலுக்கியபடியே எட்டி எட்டி படத்தையும் அவள் பார்த்தாள்.

கொஞ்ச நேரத்தில் பையன் சமாதான மடைந்து போகவே மீண்டும் உள்ளே வந்து அமர்ந்தாள்.

திரையில் கதாநாயகன் நாயகியுடன் கனவுக் காட்சியில் ஆடி, ஓடி, பாடி, கட்டி அணைத்துச் சாகஸங்கள் புரிந்து கொண்டிருந்தார்.

''என்னமா ஆடறாருக்கா'' என்று தங்கையும்,—

''இவருக்கு வயசாயிடுச்சுன்னு நம்ப முடியுதா?'' என்று அக்காக்காரியும் பேசிக் கொள்வது எனக்குக் கேட்டது.

இவர்களின் ரசிப்பு குழந்தைக்கு இல்லை. மறுபடியும் சிணுங்கத் தொடங்கியது.

'சூடான டீ!—காப்பி — வடை' படம் ஓடிக் கொண்டிருக்கையிலே குறுக்கும் நெடுக்குமாய்ப் போன காப்பிப் பையனை அழைத்தாள் அக்கா.

''பால் இருக்குதாடா தம்பி?''

''இல்லிங்க—காப்பி—டீ கொண்டாரவா?''

''ஒரு காப்பியே இந்தப் பாட்டில்லே ஊத்திக் கொண்டு வரியா?''

குழந்தையின் பாட்டிலை நீட்டினாள்.

ஐந்து நிமிஷங்களுக்குள் காப்பி வந்தது. அவனிடமிருந்து ஒரு வடை, ஒரு பன் இவைகளையும் வாங்கிக் கொண்டாள் அவள்.

குழந்தை காப்பியைக் கொஞ்சம் குடித்த பிறகு 'இனி வேண்டாம்' என்பது போல் வாயிலிருந்து பாட்டிலைத் தள்ளிவிட்டு அழத் தொடங்கியது.

''இந்தா பாபு ... பன் வேணுமா, பன். சனியனே படம் பார்க்க உடாம தொந்தரவு பண்ணுதே — பிடை.''

தோளில் குழந்தையைச் சரித்த வண்ணம் அதன் கையில் பன்னைக் கொடுத்து. ''வூட்லே இந்நேரத்துக்குத் தூங்கிடும் — இன்னிக்குப் பார்த்து ரோதனை பண்ணுது நாய் —சனி!'' தாய் மொணமொணப்பது எனக்குத் தெளிவாகக் கேட்டது.

அவள் கவலை அவளுக்கு — பன்னைத் தின்றதும் குழந்தைக்குத் தூக்கம் வந்து விட்டது.

தோளில் சாய்ந்தவாறே தூங்கிப் போனதையறிந்து 'அந்தத் துணியே தரையிலே விரி தேவகி' என்று தங்கையைத் துணி விரிக்கச் சொல்லித் தரையில் — நடை பாதையில் — போட்டாள் அந்தத் தாய்.

கொஞ்சம் அமைதியுடன் நான் படம் பார்க்கத் தொடங்கினேன்.

கதாநாயகன் ஒருவனாகப் பத்து எதிராளிகளை அடித்து நொறுக்கிக் கொண்டிருந்தார்.

எனக்கு 'போர்' அடித்தது.

கால் அருகில் ஏதோ குறுகுறு வென்றதால் தடக்கென்று குனிந்து பார்த்தேன். எலி ஒன்று ஓடியது.

கீழே படுத்திருக்கும் குழந்தையின் கையில் பன் இருந்ததே — அதை எடுக்கப் போய்க் குழந்தையின் கையைக் கடித்து விட்டால்?

எனக்குத் தவிப்பாக இருந்தது.

நல்ல வேளை இடைவேளை விட்டார்கள். எழுந்து குளியலறைக்குப் போய் விட்டு வந்தேன். விளக்குப் போடப்பட்டதாலும் தாண்டிப் போன ஒருவன் காலை மிதித்து விட்டதாலும் விழித்துக் கொண்டு விட்ட குழந்தை அழத் தொடங்கியது.

''தே....தே.... பாபு.... இங்க பாருடா அம்மாடா.....தே....'' எடுத்துக் கையில் வைத்து ஆட்டத் தொடங்கினாள் தாய்.

குழந்தைக்கு அரைத் தூக்கம்.

பாட்டிலிருந்த ஆறிப்போன காப்பியை குழந்தையின் வாயில் வைத்தாள் அவள். இரண்டு வாய் குடித்துவிட்டு, மீண்டும் குழந்தை அழுகையைத் தொடர்ந்தது.

''என்னக்கா இவன்... படம் பார்க்க வுடாம ரோதனை பண்ணறான்?.. ஆமா, உனக்குத்தான் படம்னு புடிக்குமே...இவனை வைச்சிட்டு எப்படிப் பாப்பே?''

''அத்தான் வந்துட்டாருன்னு எனக்குக் கவலையில்லே....இன்னிக்கு 'ஒன் தங்கச்சி ஊர்லேந்து வந்திருக்கே, கூட்டிட்டுப் போறுட்டாரு' — அவரு வந்தா வெளியே வெச்சிக்கிட்டு நிப்பாரு — எனக்குக் கஷ்டமில்லே.''

அக்கா, தங்கை பேச்சிலிருந்து அவர்கள் குடும்ப விவரமும் எனக்கு ஓரளவுக்குப் புரிந்தது.

தாயின் மடியில் உட்கார்ந்து மலங்க மலங்க விழித்த குழந்தையின் வாயில் வடையைக் கிள்ளி வைத்தாள் தேவகி.

குழந்தைக்கு வடையில் ருசி பிடித்து முழு வடையையும் கவைக்கத் தொடங்கியது. கொஞ்ச நேரத்தில் விளக்கு அணைக்கப்பட்டு ஸ்லைடுகள் காண்பிக்க ஆரம்பித்தார்கள்.

தோளில் போட்டுக் கொண்டு தட்டித் தூங்க வைக்க நினைத்த தாய் குழந்தையைத்

தோளில் சாத்தின வேகத்தில் குழந்தையின் முகவாய் சீட்டின் பின்பக்கம் இடித்து, வலியின் காரணமாய்க் குழந்தை வீரிடத் தொடங்கியது.

குழந்தை அழும் காரணம் தாய்க்குப் புரியவில்லை.

''டே ராசா....பாபு.... ஏண்டா அளுறே? வடை இலே உளுந்துடுச்சா? டேய்'' குழந்தையின் அழுகை குறையவில்லை.

கதாநாயகனும், நாயகியும் திருட்டுத்தனமாய்க் கல்யாணம் பண்ணிக் கொண்டு திரையில் முதல் இரவைக் கழித்துக் கொண்டிருந்தார்கள்.

''பீடை — மூதேவி, வாயை மூடு, சனி— எழவு'' முதலிரவின் இனிமையைப் பார்க்க முடியாத கோபத்தில் குழந்தையைப் 'பளிச்' சென்று இரண்டு முறை அறைந்தாள் தாய்.

அழுகை பெரிசாகப் போனது. ''சனியனைக் கொஞ்சம் வெளியே தூக்கிட்டுப் போயேன் தேவகி.''

''ஐயே! என்னால் முடியாதுக்கா. சும்மா சும்மா என்னையே சொல்றே? நீ போ'' தங்கை மறுத்து விட்டாள்.

அக்காக்காரிக்குக் கோபமான கோபம். விருட்டெனஎழுந்து வாசலுக்குப்போனாள்!

''வாயை மூடு — மூடு'' மேலும் ஓர் அடி குழந்தைக்குக் கிடைத்தது.

அறையின் வலி காரணமாகக் குழந்தை அலறத் தொடங்கவே அந்தப் பக்கம் போன சோடா கலர் பையனிடமிருந்து கலர்ஒன்றை வாங்கிக் குழந்தையின் வாயில் மெல்ல அவள் ஊற்றினாள்.

அழுகை கொஞ்சம் குறைந்தது.

மறுபடியும் உள்ளே அவள் வந்து உட்கார்ந்தாள்.

அழுதழுது குழந்தைக்கு விக்கல் எடுத்து விட்டது.

பால், காப்பி, பிஸ்கோத்து, வடை, பன், கலர் என்று ஒன்று மாற்றி ஒன்று கொடுத்தது வயிற்றை என்ன பண்ணியதோ —அடுத்த ஒரு நிமிஷத்தில் கொட கொடவென்று அத்தனையும் வாந்தி எடுத்துவிட்டுப் பெரிசாய் அழத் தொடங்கியது.

திரையில் கதாநாயகன் தாயின் பெருமைகளைக் கூறி ''தாயே என் தெய்வம் — என் கோவில் — என் இதயம் —'' என்று பாடத் தொடங்கினான்.

அழுகின்ற குழந்தையின் வேதனையைத் தாங்க இயலாதவனாக நான் எழுந்து, மேடு இறங்கி, கொட்டகையை விட்டு வெளியே வந்தேன்.

---




● ஏழு லட்சத்து எண்பத்தையாயிரம் ரூபாய் டிசம்பர் 12ந் தேதி முடிய ஒரே வாரத்தில் ஓடும் ரயிலில் நடத்தப்பட்ட திடீர் சோதனைகள் மூலம் வசூலிக்கப்பட்ட அபராதத் தொகை. 34,186 ஓசிப் பயணிகள் பிடிபட்டனர். அவர்களிடமிருந்து ரூ. 4.86 லட்சம் அபராதத் தொகை வசூலிக்கப்பட்டது. மீதத் தொகை கட்டணம் செலுத்தாமல் ரயிலில் திருட்டுத்தனமாக ஏற்றப்பட்ட சரக்குகளுக்காக வசூலிக்கப்பட்டது. ஓசிப் பயணிகளில் 3,473 பேர் ஜெயிலுக்கு அனுப்பப்பட்டனர்.

● சந்திரமுகி, சிந்தூரி — இவை உருளைக் கிழங்கின் இரு ரகங்கள். இவற்றுக்குப் பிரிட்டன், ஹாலந்து, ஃசெகோஸ்லாவியா, ஈரான், மத்திய கிழக்கு நாடுகளில் நல்ல கிராக்கி. இதனால் ரூ. 30 கோடி மதிப்புள்ள உருளைக் கிழங்கு இந்த ஆண்டு வெளிநாட்டுக்குப் பயணமாகும் என்று எதிர்பார்க்கப் படுகிறது. இதேபோலத்தான் வெங்காயமும். ரூ. 13.5 கோடிக்கு வெங்காயம் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகி யுள்ளது.

● 1950 முதல் 1975 வரை 25 ஆண்டு காலத்தில் நம் நாட்டில் கல்வி நிலையங்களின் எண்ணிக்கை 'கிடுகிடு' வென்று உயர்ந்து வந்துள்ளது. 50—51 ஆண்டில் இருந்த பல்கலைக் கழகங்கள் 27. ஆனால் இப்போதோ 1144. அப்போது இருந்த உயர்நிலைப் பள்ளிகள் 7,288. இப்போதோ 41,666. இதேபோல் 408 ஆக இருந்த கல்லூரிகள் இப்போது 3,250 ஆக உயர்ந்துள்ளன. 13,596 ஆக இருந்த நடுநிலைப் பள்ளிகள் 1,02,083 ஆக உயர்ந்துள்ளன.

● 'எம். வி. இந்தியன் கிரேஸ்' விசாகப் பட்டினத்தில் உள்ள ஹிந்துஸ்தான் கப்பல் கட்டும் கூடத்தில் தயாரான 75வது கப்பல். அது மட்டுமல்ல — இதுவரை இந்தியாவில் கட்டப்பட்ட கப்பல்களில் இன்னொரு மிகப் பெரிய கப்பல் இது. மொத்தம் 21,600 டன் எடையுள்ளது. இன்ஜின் அறைக்கு ஆட்கள் தேவையில்லை. தானாகவே இயங்கும் வடிவு அமைக்கப்பட்டுள்ளது இக் கப்பல்.





## பொன்னகை தோற்கும் புன்னகை

ஒருத்தி: எப்போதும் குஷியாகப் பாடிக்கொண் டிருக்கிறவர்களைத்தான் எனக்குப் பிடிக்கும்!
மற்றொருத்தி: அப்படியானால் கொசுவை உனக்கு ரொம்பப் பிடிக்கும் என்று சொல்லு!





கொத்தனார்: சார், இப்பொழுதுதான் அங்கெல் லாம் சிமெண்ட் பூசியிருக்கேன். கால் பட்டா கெட்டுப் போயிடும்!
வீட்டுக்காரர்: அது எனக்குத் தெரியாதா? அது க்குத்தான் செருப்பும் போட்டுக் கொண்டு நடக் கிறேன்!

லதா: ஏன்படி! உனக்குக் கல்யாணம் நடந்ததே. மானேஜர் என்ன கொடுத்தார்?
மாலா: ஒரே ஒரு நாள் லீவு கொடுத்தார்!

★

ஒருவர்: வீடு ரொம்ப நன்றாக இருக்கிறது. திருஷ்டி பரிகாரம் ஏதாவது செய்ய வேண்டும்.
மற்றவர்: அதொன்றும் அவசியமில்லே, சார்!... அடுத்த வாரம்தான் நீங்கள் குடிவந்துவிடப் போகிறீர்களே!

★

மனைவி: இதோ கட்டிக் கொண்டிருக்கிறேனே புடவை இது எப்படி இருக்கு, பார்த்துச் சொல் லுங்கோ!
கணவன்: சிக்கலே இது!
மனைவி: அதுக்குத்தான் கேட்டேன். வாசல்லே பிளாஸ்டிக்காரன் ரொம்ப நேரமாகக் காத்துண் டிருக்கான்!

—பானுமதி

அயர்லாந்து நாட்டில் வடக்கு, தெற்குப் பகுதி களுக்கிடையே எப்போதும் ஏதாவது சண்டை நடந்து கொண்டேயிருக்கிறது. வில்லியம்ஸ், காரிகா என்ற இரு பெண்மணிகள் சமாதானத்துக்காக இடை விடாத பிரசாரம் செய்து வருகிறார்கள். பக்கத்தி லுள்ள நார்வே நாட்டுக்காரர்கள் அவர்களுக்கு ஏதாவது பரிசு கொடுக்க வேண்டுமென்று தீர்மா னித்தார்கள். நார்வே நாட்டின் 12 தினசரிகள் ஒன்று சேர்ந்து நிதி திரட்டி அவர்களுக்கு 16,00,000 பவுன் கொடுத்தார்கள்.

-சரோஜா ராமச்சந்திரன்

## பீதி தந்த பீரோ!

ராஜம் கிருஷ்ணன்

நாளுக்கு நாள் நாகரிகம் பெருகி வரும் பம்பாய் நகரில் ஏமாற்று வித்தைகளும்பெருகி வருகின்றன. இந்த ஊரில் ஃபிளாட் ஸிஸ்டம் என்றாலும் ஒருவர் வீட்டில் நடப்பது அடுத்த வீட்டுக்காரருக்குத் தெரியாது. அநாவசிய மாகத் தெரிந்து கொள்ள முற்பட மாட் டார்கள். ஆனால் ஆபத்து சமயங்களில் உதவவும் தயங்க மாட்டார்கள். என்னுடைய பக்கத்து ஃபிளாட்டில், என்னுடைய தோழி யின் வீட்டில் நடந்தது இது. அவளுடைய வீட்டில் மாமியார், குழந்தைகள் ஊருக்குப் போயிருந்தார்கள். பகல் நேரங்களில் அநேக மாக அவள் தனியாக இருக்க நேரிடும்.

ஒருநாள், ஒரு புது 'காட்ரெஜ்' பீரோவை நான்கைந்து பேர்களாகத் தூக்க முடியாமல் தூக்கி மேலே அவளுடைய வீட்டில் கொண்டு வந்து வைத்தனர். அவள் ஒன்றும் புரியாமல்

## காதிலே பூரான்!

எங்கள் ஊர் பாலக்காட்டுக்கு அருகில் உள்ள ஒரு சிறிய கிராமம். என் கணவர் அங்கு சொந்தமாய் 'பிராக்டீஸ்' செய்யும் ஒரு டாக்டர். அங்குள்ள ஜனங்களில் பெரும் பாலோர் வயல்களில் கூலிக்கு வேலை செய்து பிழைப்பவர். அவர்கள் பெரும்பாலும் டாக்ட ருக்குத் தரும் சன்மானம் ஒரு பூசணிக்கா யாகவோ, பலாப்பழமாகவோ இருக்கும். சில சமயம் மருந்து வாங்க என் கணவரே காசு கொடுப்பதும் உண்டு. வியாதிக்கு மருந்து கொடுப்பதோடு அல்லாமல் மனத் தத்துவ சிகிச்சையும் செய்ய வேண்டி நேரும்!

ஒரு நாள் கூலி வேலை செய்யும் ஒரு பெண் தன் காதில் ரொம்ப நாட்களாய் உள்ள ஒரு பூரானை எடுக்க வேண்டுமென்று இவரிடம் வந்தாள். பல டாக்டர்களிடம் காட்டியும் ஒருவராலும் எடுக்க முடியவில்லை என்றும் கூறினாள். காதைப் பரிசோதித்ததில் காதில் ஒன்றும் இல்லை. வீண் மனப்பிரமை என்று தெரிந்தது. அவள் காதிலிருந்து ஒரு பூரானை எடுத்துக் காட்டினால் ஒழிய அவள் சமாதான மடையப் போவதில்லை என்று தெரிந்ததும் என் கணவர் ஒரு யுக்தி செய்தார். பழுப்பு நிறக் கம்பளி ஒன்றின் மூலையில் உள்ள குச்சங் களில் ஒன்றை வெட்டி ஒரு பாட்டிலில் போட்டு அதில் தண்ணீரை விட்டார். அது ஊறியதும் தூரத்திலிருந்து பார்க்கப் பூரான்

திகைக்க, ''ஐயா பதினைந்து நாள் முன்பு ஆர்டர் பண்ணினார், ஃபினிஷிங் டச்சப் செய்து கொண்டு வந்ததால் கொஞ்சம் டிலே'' என்று சொல்லி அவருடைய பெயர், வேலை பார்க்கும் இடம் எல்லாவற்றையும் சரியாகச் சொல்லவும் அவளுக்கு நம்பிக்கை பிறந்தது. இருந்தாலும் அவளிடம் சொல்லாமல் அவர் எதுவும் செய்ததில்லை ஆதலால் சந்தேகமாகவும் இருந்தது. சாவியைப் பெற்றுக் கொண்டு அவர்களை அனுப்பி விட்டாள். பிறகு என்னை அழைத்து வந்து உடன் இருக்கச் சொல்லி அவருக்குப் போன் பண்ணினாள். அவர் சொன்ன பதில் எங்களை மிகவும் திடுக்கிட வைத்தது. அவர் அதுபோன்று ஆர்டர் பண்ணவே இல்லையென்றும், சிறிது நேரத்தில் வந்து விடுவதாகவும், அதுவரை பேசாமலிருக்கும்படியும் கேட்டுக் கொண்டார். எங்களுக்குப் பயம் பிடித்துக் கொண்டது. பக்கத்து ஃபிளாட்காரியையும் உடன் அழைத்துக் கொண்டோம். சிறிது நேரத்தில் ஆபீஸ் காரில் பல நண்பர்களுடன் அவர் வந்த பிறகுதான் சிறிது நிம்மதியாக இருந்தது. நாங்கள் நடந்ததைச் சொன்னோம். அவருக்கும் ஒன்றும் புரியவில்லை. பிறகு எல்லோருமாகப் பீரோவைத் திறப்பதென்று முடிவு செய்து, அதன்படி திறந்தவுடன் முதலில் அலறியது நான்தான். இப்பொழுது நினைத்தாலும் உடல் சிலிர்க்கிறது. அதனுள் ஒருவன் கையில் சிறிய கத்தியுடன் நின்று கொண்டிருந்தான். நடுவில் அறைகளுக்கான தடுப்பு ஏதும் இல்லாத பீரோ. அவனைப் போலீசில் ஒப்படைத்துப் பெருமூச்சு விட்டோம். அப்பப்பா! நாங்கள் நிறையப் பேர் இருந்ததால் அவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. பீரோவைக் கண்ட மகிழ்ச்சியில் என் தோழி அதை உடனே திறந்திருந்தால் அவள் கதி என்னவாகியிருக்கும்! முன்யோசனையுடன் என்னைத் துணைக்கு அழைத்துக் கொண்டு பிறகு கணவருக்கும் போன் பண்ணியது எவ்வளவு நல்லதாயிற்று!



போலவே இருந்தது. அந்தப் பெண் காணாதபடி பாட்டிலைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு, அவளுடைய காதிலிருந்து எதையோ எடுப்பது போல் நடித்து ''இதோ வந்து விட்டது பூரான்!'' என்று இவர் கத்தவும் அடுத்த நிமிஷம் அந்தப் பெண் பூரானைக் காணப் பயந்து அறைக்கு வெளியே போய் நின்று விட்டாள். இவர் தூரத்திலிருந்து பாட்டிலைக் காட்டி, பூரானை எடுத்து விட்டதாகவும் இனி சமாதானமாய் வீட்டுக்குப் போகும்படியும் கூறி அந்தப் பெண்ணை அனுப்பி வைத்தார். ஒவ்வொரு நாளும் இது போல் அதிசய வியாதிகளைக் கூறிக் கொண்டு வருபவரைச் சமாதானப் படுத்தி அனுப்பி வைப்பதற்குள் போதும் போதுமென்று ஆகிவிடும். ஆனாலும் இந்த எளிய மக்களின் அன்புக்கு முன் எதுவுமே கஷ்டமாகத் தோன்றுவதில்லை. அடுத்த நாள் அந்தப் பெண் தன் வீட்டில் காய்த்ததாகக் கூறி ஒரு கூடை பிஞ்சு அவரைக்காய்களை மிகுந்த ஆசையுடன் கொண்டு வந்து தரும் போது மனம் நெகிழாமல் என்ன செய்யும்?

— சாந்தி
பாலகிருஷ்ணன்





# குங்குமப் பொட்டுகள் யாவும் ஒரே வகை அல்ல !

**சிங்கார் நிச்சயமாக மேன்மையானது**

- சன்னமாகவும், சமனமாகவும் அணிந்திடக் கூடியது
- எழில் மிகுந்தது
- வழிந்து பரவாது
- உலர்ந்ததும் கீறல் விழாது
- கறை ஏற்படுத்தாது
- சுகாதார முறையில் தயாரித்தது.

குறிப்பிட்டுக்
கேட்பீர் எப்போதும்

## சிங்கார்

முழுமை எழில் கொஞ்சும்,
இந்தியாவின்
உச்ச விற்பனையுள்ள
குங்குமப் பொட்டு.

பாரமௌண்ட் ப்ராடக்ட்ஸ்,
809, ப்ரஸாத் சேம்பர்ஸ்,
பம்பாய் 400 004.






ஸிந்தூர்

everest/638/SH Tam




கோமல் சுவாமிநாதன்

## காட்சி 9

(சொக்கலிங்கத்தின் வீடு.)

சொக்கலிங்கம் (கோபமாக உலாத்திக் கொண்டே.): யூ ராஸ்கல். எனக்கு முன்னாலே வந்து சொல்ல உனக்கு என்ன துணிச்சல்? நீ ஒரு உமனைசர்னு எனக்குத் தெரியும். ஆனால் இந்த அளவுக்கு... போடா வெளியே!

பிரசாத்: முட்டாள் தனத்தினாலே தப்புப் பண்ணிட்டேன். அதுக்கு இப்ப நான் வருத்தப்படறேன். அந்தப் பெண் இப்ப நியாயம் கேட்டுச் சிவராமனுடைய உதவியை நாடி வந்திருக்கா. இன்னும் எழுபத்திரண்டு மணிநேரத்துக்குள்ளே நாங்க எங்க குற்றத்தை ஒப்புக்கொண்டு போலீசுலே சரணடையணும்னு அவன் சொன்ன கெடுவுல பன்னிரண்டுமணி நேரம் தாண்டிப்போச்சு.

சொக்க: போடா, போ... சிவராமன் சொன்ன மாதிரி போலீசுல போய்ச் சரணடை. அதுதான் உனக்குக் கதிமோட்சம். இப்படி ஒரு புள்ளை வீட்டிலே இருக்கிறதை விட அவன் சாகிறது மேல். இப்பவே போ. இல்லே, நானே போலீசுக்கு போன் பண்ணி உன்னைக் கைது பண்ண வைப்பேன், போ!

பிரசாத்: உங்களுக்கு அந்தச் சிரமம் வேண்டாம். நானே போலீசுலே போய்ச்சரணடையறதா இருக்கேன். 'பிரசாத்' என்கிற இந்தத் தனி மனிதன் போலீசுக்குப் போய்ச் சரணடையறதுனாலே அவனுக்கு எந்த விதமான தலைக் குனிவும் ஏற்பட்டுடாது. ஆனா பெரிய இண்டஸ்டிரியலிஸ்ட் சொக்கலிங்கத்துடைய மகன் போலீசுல போய்ச் சரணடைஞ்சான்னுதான் பேர் வரும். உங்களுடைய கௌரவம்தான் அதனாலே பாதிக்கப்படும். மாஜி ஷெரீப் பையனே இந்தத் தப்புப் பண்ணிட்டான்னு ஜனங்களுக்குத் தெரிஞ்சா உங்க முகத்திலேதான் காறித் துப்புவாங்க. அதனாலே பாதிக்கப்படுவது முழுக்க முழுக்க உங்க 'இமேஜ்' தான். அதை இழக்க நீங்க தயாராக இருந்தா இப்பவே போலீசுக்குப் போன் பண்ணுங்க.

(சொக்கலிங்கம் தீர்க்கமாக ஒரு முடிவெடுத்துவிட்டு டெலிபோனை எடுத்துப் போலீசுக்குப் போன்செய்கிறார்.)

சொக்க: போலீஸ் கண்ட்ரோலா?

பிரசாத்: அப்பா... அப்பா...

(கெஞ்சுகிறான். ஃபோனை வைத்து விடுகிறார்.)

சொக்க: உன்னைப் பெத்த கடனுக்காக நான் செய்யற கடைசித் தப்பு இது. இன்னொரு தரம் நீ தப்பு பண்ணிட்டு வந்தா நானே உன்னைச் சுட்டுத் தள்ளி விடுவேன்...

(பிரசாத் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு போகிறான். சொக்கலிங்கம் ஆசனத்தில் அமர்ந்து யோசிக்கிறார். சில விநாடிகளில் சிவராமன் உள்ளே வருகிறான்.)

சிவராமன்: சார்...!

சொக்க: வாப்பா.

(இருவரும் ஒரு நிமிஷம் மௌனம்)

சொக்க: நான் சொல்ல நினைக்கிறதை என்னாலே சொல்ல முடியலேப்பா.

"கேவலம் ஊர் பேர் தெரியாத ஓர் அனாதைப் பெண்ணுக்காக நீ ஒரு போராட்டமே தொடங்குவேன்னு சொன்னா, தான் பெத்த பிள்ளைக்காக அதைக் காட்டிலும் ஒரு படி மேலே போயிட மாட்டேனா?"





சிவ: நானும் சொல்ல வந்ததைச் சொல்ல முடியலே சார். நடந்ததெல்லாம்...

சொக்க: தெரியும். அதுக்குப் பிராயச் சித்தமாகவோ, அல்லது நீ எனக்கு உழைச்ச உழைப்புக்கு அன்பளிப்பாகவோ இரண்டு லட்ச ரூபாய் பெறுமானமுள்ள இந்த மூங்கில் பூ பத்திரிகை, இந்த அச்சகம், எல்லாவற்றையுமே உன் பேருக்கு டிரான்ஸ்பர் பண்ணப் போறேன்.

சிவ: எதுத்தாப்பலே பிரசாத் போறதைப் பார்த்தேன். அவன் முந்திக்கிட்டான்.

சொக்க: நீ என்ன சொல்றே?

சிவ: இதுக்கெல்லாம் பதிலா நீங்க போடற கண்டிஷனுக்கு நான் ஒத்துக்கணும்.

சொக்க: ஆமாம்.

சிவ: அதாவது கல்யாணி – பிரசாத் விஷயமாக இந்த நிமிஷத்திலே இருந்து நான் வாயைத் திறக்கக் கூடாது. என் மௌனத்துக்கு விலை இரண்டு லட்சம்.

சொக்க: உன் பேச்சுக்கும் எழுத்துக்கும் நான் எவ்வளவோ விலை கொடுத்திருக்கணும். அப்பல்லாம் கொடுக்காத விலையை இப்ப உன் மௌனத்துக்காகக் கொடுக்கிறேன்.

சிவ: இவ்வளவு கேவலமான ஒரு முடிவுக்கு நீங்க வரமாட்டீங்கன்னு உங்களைப் பத்தி ரொம்ப உயர்வா நெனைச்சேன். உங்களுடைய இந்த முடிவுக்கு நான் ஒத்துக்கலேன்னு...

சொக்க: உன் சீட்டுக் கிழியும். வேலை போகும்.

சிவ: அந்தச் சிரமம் உங்களுக்கு வேண்டாம். இந்தாருங்கள் ராஜிநாமா! தயாராகவே கொண்டு வந்திருக்கிறேன்.

சொக்க: சிவராமன்! உன் சுய சிந்தனைக்கும் சுதந்திர உணர்ச்சிக்கும் இடம் கொடுத்தவன் நான். இன்னைக்கு மக்களிடம் உன் பேனாவுக்கு ஒரு செல்வாக்கு, சக்தி இருக்குதுன்னு அது என்னால.

சிவ: அதை நான் மறுக்கல்லே! தபால் கொண்டு வருகிற தபால்காரரே அந்தத் தபாலை எழுதினவராகிவிட முடியாது. என்னைப் பொறுத்த மட்டில் நீங்க ஒரு தபால்காரர் மாதிரிதான்.

"பாதிக்கப்படுவது முழுக்க முழுக்க உங்க 'இமேஜ்' தான்! அதை இழக்க நீங்க தயாராக இருந்தா இப்பவே போலீசுக்குப் போன் பண்ணுங்க!"

"ஊருக்கெல்லாம் பத்திரிகை மூலம் நியாயம் சொன்ன ஒரு பெரிய மனிதர் தன் மகனுக்காக இவ்வளவு கீழ்த்தரமா இறங்குவார்ங்கிறதை என்னாலே நம்ப முடியலே."



சொக்க: இத்தனை வருஷங்களுக்குப் பிறகும் அந்த அளவுக்குத்தான் நீ எனக்கு மதிப்பு வச்சிருக்கியா?

சிவ: இத்தனை வருஷங்களுக்குப் பிறகும் இரண்டு லட்சம் ரூபாய்க்குச் சிவராமனை விலைக்கு வாங்கிடலாம்னு நெனைச்சீங்களே, அதை விட இது கேவலமில்லே.

சொக்க: முடிவா என்னதான் சொல்லறே?

சிவ: இன்னும் அறுபது மணி நேரத்திலே பிரசாதும் அவனுடைய காலாடி நண்பர்களும் போலீஸ்கிட்ட சரணடையணும். அது ஒண்ணுதான் என் வாயை மூடவைக்கும்.

சொக்க: அப்படிச் சரணடையலேன்னா?

சிவ: பிரசாத்தைப் பத்தி எழுதவே ஒரு பத்திரிகையைத் தொடங்குவேன். அந்த ஒரு பெண்ணுக்காகவே அந்தப் பத்திரிகையின் பக்கங்களை நிரப்பி ஒரு போராட்டமே நடத்துவேன்.

சொக்க: கேவலம் ஊர் பேர் தெரியாத ஓர் அனாதைப் பெண்ணுக்காக நீ ஒரு போராட்டமே தொடங்குவேன்னு சொன்னா, நான் பெத்த பிள்ளைக்காக அதைக் காட்டிலும் ஒரு படி மேலே போயிட மாட்டேனா? சிவராமன்! இந்த நிமிஷத்திலிருந்து உனக்கும் எனக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது. இந்தச் சொக்கலிங்கத்தின் உண்மையான சொரூபம் வெளிப்பட்டா நீ இருக்கிற இடமே தெரியாமப் போயிடுவே...உன் வாழ்வே சித்திரவதைக்குள்ளாகும்.

சிவ: அப்படி நீங்க செய்தா உங்க மகள் வாழ்வுதான் பாதிக்கப்படும். என் தம்பி நித்யா எனக்கு ஓர் அவகேடு வருவதை நிச்சயமாய்ப் பொறுக்க மாட்டான். அதுக்குக் காரணமாயிருக்கிறவருடைய மகளை அவன் ஏறெடுத்தும் பார்க்க மாட்டான். நிபாவிலு... தவிப்பு உங்க வாழ்க்கையையும் சித்திரவதைக்கு உள்ளாக்கும்.

சொக்க: நான்ஸென்ஸ்! என் மக வாழ்க்கையைப் பணயம் வைக்கிறேன்னு சொல்றியா? இந்த நித்யா ஈந்தம் இல்லேன்னா இன்னொரு அறிவானதம். என் மகளுக்குக் கல்யாணம் செய்து வைக்க எனக்குத் தெரியும். கெட் அவுட்.

சிவ: இந்தப் பத்திரிகையிலே என்னை நீங்க வேலைக்குச் சேர்த்துக்கிட்டபோது உங்களை ஒரு லட்சிய புருஷனா, பெரிய மனிதரா நினைச்சேன். ஊருக்கெல்லாம் பத்திரிகை மூலம் நியாயம் சொன்ன ஒரு பெரிய மனிதர் தம் மகனுக்காக இவ்வளவு கீழ்த்தரமா இறங்குவார்ங்கறதை என்னாலே இப்பவும் நம்ப முடியலே... நீங்க பாசத்துக்கு அடிமைப்பட்ட தகப்பன் தானா இல்லே, நியாயம் நேர்மை தவறாத பெரிய மனுஷனுங்கறதை நீங்களேதான் முடிவு செய்துக்கணும்.

## காட்சி 10

(ஏழுமலை நாயுடு வீடு. ஆனந்தன் உள்ளே வருகிறான்.)

ஆனந்த்: அப்பா, அப்பா...!
(கல்யாணி உள்ளேயிருந்துவருகிறாள். கல்யாணியின் தோற்றத்தில் மாற்றத்தைக் கண்ட ஆனந்த் திகைத்து நிற்கிறான்.)
இது ஏழாம் நம்பர் வீடுதானே?

கல்யாணி: ஆமாம்... நீங்க யாரு?...

ஆனந்த்: நான் யாரா? என்ன விளையாடறீங்க? நான்தானே உங்களை ஆரத்தி எடுத்து வரவேற்றது!

கல்: நீங்க என்ன சொல்றீங்க?...

ஆனந்த்: உண்மைதாங்க. அன்னிக்கே நான் வேலூர் போயிட்டேன். இன்னிக்குத்



தான் வர்றேன். அப்ப நான் ஆரத்தி எடுத்து வரவேற்ற பொண்ணு ஒரே சோகமா, 'ஏண்டா இந்த உலகத்திலே பிறந்தோம்! என்னடா வாழ்க்கை இது?' அப்படீன்னு மூகத்தைத் தொங்கப் போட்டுக்கிட்டுத் துக்கத்தின் எல்லையிலே இருந்தது. இன்னிக்கு என்னமோ பளிச்சென்று அந்தப் பொண்ணு அலங்கரிச்சுக்கிட்டு கலகலன்னு இருக்குது. எப்படி இந்த 'மாஜிக்' நடந்தது?

கல்யா: நல்ல மனிதர்கள், மகிழ்ச்சியான சூழ்நிலையிலே இருந்தா யாருக்குமே சந்தோஷம் ஏற்படத்தானே செய்யும்?

ஆனந்த்: யாரு அந்த நல்ல மனிதர்கள்?

கல்யா: இந்த வீட்டிலே இருக்கிறவங்க எல்லாருமேதான்.

ஆனந்த்: நானும் இந்த வீட்டிலேதான் இருக்கேன்....என் பேர் ஆனந்த். சர்மாவின் பிள்ளை. அப்பா இல்லையா?

கல்யா: மார்க்கெட்டுக்குப் போயிருக்கார்.

ஆனந்த்: சிவராமன்... நித்யா...?

கல்யா: வெளியே போயிருக்காங்க.

ஆனந்த்: அப்ப நான் போயிட்டு அப்புறமா வரேன்.

கல்யா: போகலாம், இருங்க.

ஆனந்த்: தப்பு, தப்பு. ஒரு பிரமச்சாரியும், ஒரு பிரம்மச்சாரிணியும் தனியா இருந்தா இந்த உலகத்துக்கு வாழ்நாள் முழுவதும் பேசக் கதை கிடைச்சுடும். அதனுலே நாம் என்ன பண்ணனும், தெரியுமா? அந்தக் கதை கிடைக்காமல் உலகத்தை ஏமாத்தனும்.

கல்யா: சரி, காப்பி சாப்பிடுறீங்களா?

ஆனந்த்: நீங்க இப்ப உங்க கையாலே போட்டுத் தரப் போறீங்களா? இல்லே எங்கப்பா போட்டு ஃப்ளாஸ்கிலே எடுத்து வைச்சிருக்காரா?

கல்யா: எந்தக் காப்பி உங்களுக்குப் பிடிக்கும்?

ஆனந்த்: ஃப்ளாஸ்க் காப்பிதான் எனக்குப் பிடிக்கும்.

கல்யா: ஏன்?

ஆனந்த்: அதனுலே உங்களுக்குச் சிரமம் இல்லே, பாருங்க. ஏங்க, ஒரு சின்ன விஷயம். ஏழுமலை நாயுடுவினுடைய தத்தெடுத்த பொண்ணு இந்த வீட்டுக்கு வந்திருக்கீங்களே, உங்களை எங்கே எப்படிக் கண்டுபிடிச்சாங்க?

கல்யா: (சோகமான ஒரு பார்வை)

ஆனந்த்: ஓஹோ! பெரிய புராணமோ? அப்ப அதை விடுங்க. நீங்க படிச்சுக்கிட்டு இருக்கீங்களா?

கல்யா: பி.எஸ்.ஸி முதல் வருஷத்தோட நிறுத்திட்டேன்.

ஆனந்த்: ஏன்?

கல்யா (கண்களில் நீர் மல்க): திடீர்னு அப்பா தவறிட்டாரு.

ஆனந்த்: ஓ! ஐ ஆம் ஸாரி. விளையாட்டா அரம்பிச்சு என்னமோ கேட்டுட்டேன். வருத்தப்படாதீங்க. ஆமா, காப்பி தரேன்னீங்களே!

கல்யா: ஃப்ளாஸ்கு காப்பிதானே?

ஆனந்த்: நோ, நோ... உங்க கையாலே போட்ட காப்பி!

(கல்யாணி கண்ணீரைத் துடைத்துக் கொண்டு மகிழ்ச்சியுடன் உள்ளே போகிறுள். ஆனந்த் அவள் போவதையே பார்த்துக் கொண்டிருக்கிறுன். சர்மா வருகிறுர்.)

சர்மா: வாப்பா, எப்ப வந்தே?

ஆனந்த்: இப்பத்தான் வந்தேன்.

சர்மா: காப்பி சாப்பிட்டியா?

ஆனந்த்: மாடியிலே ஒரு புதுப் பெண் வந்திருக்குதே. அது காப்பி கொண்டு வரேன்னு போயிருக்கு.

சர்மா: புதுப் பெண்ணு? ஓ! கல்யாணியா?

ஆனந்த்: நீங்க என்ன காய்கறி வாங்கப் போயிருந்தீங்களா?

சர்மா: காய்கறி வாங்க மட்டும் போகல்லே! நீதான் ஆறு மாசம் கெடு வைச்சிட்டியே! அதுக்குள்ளே உனக்கு ஒரு நல்ல பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் பண்ணி வைக்கலாம்னு தேடப் போனேன்.

ஆனந்த்: என்னப்பா அவசரப் படறீங்க! நான் ஒரு பேச்சுக்குச் சொன்னு!

சர்மா: நல்ல மாட்டுக்கு ஒரு சூடு போதும்பா! ஆனல் ஒரு கண்டிஷன்.

ஆனந்த்: என்னப்பா?

சர்மா: நான் உனக்குத் தேடிக் கொண்டு வர பெண் யாரா இருந்தாலும் நீ கல்யாணம் பண்ணிக்கச் சம்மதிக்கணும்.

ஆனந்த்: அப்பா! இதுலே கொஞ்சம் சிக்கல் இருக்கு. நமக்குள்ளே இப்படி ஓர் ஒப்பந்தம் பண்ணிப்போமே!

சர்மா: எப்படி?

ஆனந்த்: இன்னும் ஆறு மாசம் இருக்கு! இதுக்குள்ள நீங்க முதல்லே பெண்ணைத் தேடிக் கொண்டு வந்தா நான் சம்மதிக்கிறேன். நான் முதல்லே கொண்டு வந்தா அந்தப் பெண்ணையே நீங்க எனக்குக் கல்யாணம் பண்ணி வைக்கணும். அவ்வளவுதாம்பா.

சர்மா: சரிடா. எங்கே அப்பன் 'டிலே' பண்ணிடப் போறுனேன்னு இப்படி ஒரு கண்டிஷன் போட்டுட்டே. பொறுப்பு எனக்கு அதிகமாயிடுத்து. இன்னிக்கே ஈரேழு பதினலு உலகத்திலேயும் வலை வீசுகிறேன்.

ஆனந்த்: ஏன் வலையை அகலமா வீசுறீங்க. இந்தத் தெருவுக்குள்ளேயே வீசுங்க. இல்லே, இந்த வீட்டுக்குள்ளேயே வீசுங்க.

(சர்மா யோசனை)

ஆனந்த்: என்னப்பா யோசிக்கிறீங்க?

சர்மா: ஒண்ணுமில்லே. ஏழுமலை நாயுடு இந்த வீட்டை வித்துட்டு அடுத்த தெருவுல வீடு வாங்கப் போறுராம். கேள்விப் பட்டேன்.

ஆனந்த்: இது என்ன பிரச்னை? அடுத்த தெருவுக்கும் சேர்த்து வலை வீசுங்களேன்!

(கல்யாணி வந்து காப்பி என்று குரல் கொடுக்கிறுள். சர்மா அதை வாங்கிக் குடிக்கப் போகிறுர்.)

கல்யாணி: அது அவருக்கு.

சர்மா: அவருக்கா? உங்களுக்காம், சாப்பிடுங்கோ!

(காப்பியை ஆனந்திடம் தருகிறுர்.)

(தொடரும்)

**பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் தமிழ் இலக்கியப் பெருவிழா**

பம்பாய் தமிழ்ச் சங்கம் டிசம்பர் 24, 25, 26 தேதிகளில் தங்கமானதொரு இலக்கிய விழாக் கொண்டாடியது. தலைவர் ஆதிலட்சுமணன் வரவேற்றார். வாகீச கலாநிதி திரு. கி. வா. ஜகந்நாதன் தலைமையில் நடைபெற்ற இவ் விழாவிலே அ. ச. ஞானசம்பந்தன், இரா. இராதாகிருஷ்ணன், தெ. ஞான சுந்தரம், அப்துல் ரகுமான், ம. வே. பசுபதி, சொ. சொ. மீ. சுந்தரம், கவி சிவம், ரா. காந்திமதி, ரா. ருக்மிணி ஆகிய ஒன்பது சிறந்த சிந்தனையாளர்கள், பேச்சாளர்கள் பங்கு கொண்டனர்.

சிற்றிலக்கிய விழா, கவியரங்கம், காவிய விழா, பழந்தமிழ் இலக்கிய விழா, பட்டிமன்றம் ஆகியவை பம்பாய் இலக்கிய ரசிகர்கள் சந்தித்த மாபெரும் நிகழ்ச்சிகள். முதல் முறையாக அமைக்கப் பெற்ற இத் திருவிழாவுக்கு முதல் தரமான ரசிகர்கள் மூன்று நாட்களும் தொடர்ந்து வந்து ஊக்குவித்தனர்.

# இதயம் ஒரு க்ஷேத்ரம்!

தமிழில் வெற்றி வாகை சூடிய படமான 'நெஞ்சில் ஓர் ஆலய'த்தின் மலையாளப் பதிப்புதான் ஹிருதயம் ஒரு க்ஷேத்திரம். ஹிருதயம் ஒரு க்ஷேத்திரம்; அதுவும் குருக்ஷேத்திரம் என்பதை இந்தப் படம் தெள்ளென எடுத்துக் காட்டுகிறது.



இந்தக் கதையின் முக்கிய கதாபாத்திரங்கள் டாக்டர் ரமேஷ், மிஸ்டர் ஹரி, அவன் மனைவி பிரேமா. பிரேமாவை ரமேஷ் காதலித்தான்; ஹரி மணம் புரிந்து கொண்டான். ரமேஷின் மருத்துவ மனையிலேயே சிகிச்சை பெற ஹரி வரும்படி ஆயிற்று. அப்பொழுது தொடங்கிய மனப்போர் டாக்டர் ரமேஷ் மரித்தபின்தான் ஓய்கிறது. என்றாலும் பார்ப்போரின் உள்ளக் களத்தை ஆட்டிப் படைத்து விடுகிறது.

ஸ்ரீதரின் கதைக்கு வசனம் எழுதியுள்ள நாகவல்லி பாராட்டுக்குரியவர். அத்தகைய பாராட்டுக்குப் பின் நிற்பவர்கள் கச்சிதமான அவர் வசனங்களுக்கு உயிர் கொடுத்த நடிக பாத்திரங்கள்: மது, ராகவன், ஸ்ரீவித்யா ஆகியோர்.



ஸ்ரீகுமாரன் தம்பியின் பாடல் தேவராஜனின் இசையால் மெருகேறி யேசுதாஸ் — மாதுரியின் பாடும் திறனால் இதய க்ஷேத்திரத்தில் பதிகிறது. தாராவின் காமிராக் கலை அற்புதமாகச் செயலாற்றியிருக்கிறது. இப்படி எல்லாம் மிளிரக் காரணம் இயக்குநர் திரு பி. சுப்ரமணியத்தின் திறமை. -ரா. வீ.

மேசையின் மீதிருந்த அழைப்பு மணி ஒலிக்கவே சரண்யா எழுந்து மானேஜர் அறையை அடைந்தாள்.

''டேக் யுவர் ஸீட் ப்ளீஸ்!'' மானேஜர் ராஜன் கனிவுடன் கூறினான்.

சரண்யா பட்டும்படாமலும் நாற்காலியின் விளிம்பில் அமர்ந்து கொண்டாள்.

நோட்ஸ் கொடுத்தானதும், ''இந்த மேட்டரை ஒன் அவரில் டைப் பண்ணித் தர முடியுமா?'' குரலில் உத்தரவிடும் கடுமையின்றி, வேண்டுகோளின் கனிவு நிரம்பியிருந்தது.

''எஸ் ஸார்!'' என்ற சரண்யா சற்றுத் தயங்கி நின்றாள்.



'என்ன?' என்று கேட்பது போல் ஏறிட்டுப் பார்த்தான் ராஜன்.

''இரண்டு நாட்கள் விடுமுறை வேண்டும், வெள்ளியும், சனியும்!''

''ஓ. கே. நான் கூடச் சனி ஞாயிறில் வெளியூர் போகிறேன்.''

கொள்ளிடத்தில் இறங்கிச் சரண்யா அளக்குடியை அடைந்தபோது, சிதம்பரம் கல்லூரியில் பணி புரிந்து கொண்டிருந்த அவள் அக்கா சங்கரி முன்னதாகவே வந்துவிட்டிருந்ததைக் கண்டாள்.

சங்கரியைப் பெண் பார்க்க வரப் போகிறார்கள் என்பதற்காகத்தான் அவளையும் அழைத்திருந்தார்கள் அவளைப் பெற்றவர்கள்.

அடுத்த நாள் அவர்கள் வீட்டு மாட்டு வண்டிச் சலங்கைகள் மெல்லென அசைந்து வீட்டெதிரே நின்றபோது வண்டியிலிருந்து இறங்கிய உருவத்தைக் கண்டு சரண்யாவுக்கு ஒரே வியப்பு. காரணம் அவள் அக்காளைப்




# ஒரு தலைமுறை உருவாகிறது

**கோமகன்**

பெண் பார்க்க வந்திருந்தது அவளது ஆபீஸ் மானேஜர் ராஜன்!

''வாங்க ஸார்!'' என்று பழக்கப்பட்ட குரல் வரவேற்கவே ராஜன் நிமிர்ந்தான்.

''சரண்யா! நீங்கள்?...''

''என் அக்கா சங்கரியைத்தான் நீங்கள் பெண் பார்க்க வந்திருக்கிறீர்கள்!''

சம்பிரதாயப்படி பெண் பார்த்து விட்டுப் போய் எழுதுகிறோம் என்று கூறாமல், அப்போதே பெண் தங்கள் பிள்ளைக்குப் பிடித்திருப்பதாகக் கூறினார்கள், ராஜனின் பெற்றோர்கள். கூடவே அவர்கள் கூறிய செய்தி தான் இனிப்பைக் கசப்பாக்கியது.

இருபத்தைந்து சவரன்கள் நகைகள் போட வேண்டுமாம்! வரதட்சிணை ஐயாயிரம் தரணுமாம், கல்யாணத்தை விமரிசையாக நடத்தணுமாம்! தங்கள் மகனின் தகுதிக்கு இதுவே மிகவும் குறைவாம்! ''யோசித்துக் கடிதம் எழுதுங்கள். மேற்கொண்டு ஏற்பாடுகள் செய்யலாம்...'' ராஜனின் தாய் கமலம்மாள் இப்படிக் கூறவே, ஏற்கனவே மூன்று வரன்கள் தட்டிப் போன சூட்டில் இந்த வரனும் 'பிராப்தம் இல்லே' என்று முடிவுக்கு வந்தார் சரண்யாவின் அப்பா.

அம்மாவுக்கோ ஆசை அடித்துக் கொண்டது. ''நல்ல பிள்ளை. சாதுவாகத் தெரிகிறான். சங்கரியின் அழகுக்கு ஏற்றவன். அவன் அப்பா, அம்மா ஆயிரம் கண்டிஷன் போடத்தான் செய்வா... பழக்கம்னு ஒண்ணு இருக்கே. நம்ம சரண்யா பையனை நேரிலே பார்த்துப் பேசினானால் கொஞ்சம் சரிப்பட்டு வர மாட்டானா, பார்ப்பமே...''

''அது எப்படி முடியும்?'' நம்பிக்கையில்லாமலேயே கேட்டார் அப்பா.

''இப்போ சங்கரிக்குப் பதினைந்து பவுன் நகை இருக்கு. சரண்யாவுக்குப் பத்துப் பவுன் இருக்கு. அதையும் சங்கரிக்கே போட்டுட்டால் இருபத்தைஞ்சு பவுன் ஆயிடறது. நெல்லு வித்த பணத்தைக் கொண்டு கல்யாணத்தை ஜாம் ஜாம்னு நடத்தலாம்.''

''வரதட்சிணைப் பணம் ஐயாயிரம்?''

''சரண்யா கிட்டே இரண்டாயிரம் ரூபாய் இருக்காம். மீதி மூவாயிரத்துக்கு ஓர் ஏற்பாடு பண்ணுங்களேன்.''

''பாவம்! அவ குழந்தை. அவள் பணத்தை எடுக்கப்படாது.''

''எடுத்தால் என்ன? அவளுக்கு நாமதானே எல்லாம் பண்ணப் போறோம்.''

''ஆமாம்ப்பா! எடுத்துக்கங்க..'' என்றாள் சரண்யா.

சங்கரிக்கு ஒன்றுமே புரியவில்லை. இத்தனையும் பண்ணித் தனக்குத் திருமணமா என்று கசப்பாயிருந்தது.

ஊருக்குப் புறப்படும்போது சங்கரியிடம் சரண்யா கூறினாள். ''அக்கா! நீ கவலைப் படாதே. நான் அவர்கிட்டே பேசிப் பார்க்கிறேன். உன்னை அவருக்குப் பிடிச்சுட்டதுங்கறதினாலே...''

சங்கரி அவள் கைகளைப் பற்றிக் கொண்டாள். ''சின்னவளான உனக்கு என் விஷயத்தில்தான் எத்தனை அக்கறை!''

பாவம் அக்கா! என்ன செய்வாள்? திருமணத்தை வேண்டாம் என்று சொல்ல முடியாத பருவம். வேண்டும் என்று கூற முடியாத பொருளாதாரம். அதிலும் ராஜனைப் போன்ற ஒருவரைத் திருமணம் செய்துகொள்வதென்றால் யாருக்குத்தான் கசக்கும்?

அன்று மாலை டைப் செய்த காகிதங்களை எடுத்துக் கொண்டு சென்ற போது ''உட்காருங்கள் சரண்யா!'' என்ற ராஜனின் குரலில், ஆபீஸ் விஷயத்தைப் பற்றிப் பேசும் தோரணையும், கவனமும் குறைந்திருந்தன.

''உங்கள் வீட்டில் என்ன முடிவு செய்தார்கள்? தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.'' மெல்லிய குரலில், அலுவலக விஷயத்துக்கு




புதிர் விடை

(அளவு சிறிதாக்கப்பட்ட படம்)

அப்பாற்பட்டதாயிற்றே என்ற அச்சத்தோடு கேட்டான் ராஜன்.

''ஸார்! அதில் ஒரு சின்ன சிக்கல் இருக்கிறது'' என்று தயங்கினாள் சரண்யா.

''...பார்மாலிடி பார்க்காமல் மனம் விட்டுச் சொல்லுங்கள்!''

''நீங்கள் ரொம்பவும் நேர்மையானவர்ங்கிறதனாலே, உங்களிடம் இந்த விஷயத்தை டிஸ்கஸ் பண்ணலாம்னு நினைச்சேன். ஆனால் தயக்கமாய் இருந்தது. நீங்களே கேட்டதினாலே சொல்கிறேன். இன்னும் கூட ஒரு பெண், பட்டதாரியானாலும் வேலைக்குப் போய்ச் சம்பாதிப்பவளானாலும் ஒரு மணமகனை விலைக்கு வாங்க வேண்டிய நிலையில்தான் இருக்கிறாள். இந்த நிகழ்ச்சியின் கொடுமை உங்களைப் போன்ற ஆண்களைவிட, என்னைப் போன்ற பெண்களுக்குத்தான் மிகவும் தெரியும். ஓர் இழிவான வாழ்க்கை முறையை இன்னமும் ஏன் பின்பற்ற விழைகிறார்கள் இக்கால இளைஞர்கள் என்பது எனக்குப் புரியவே இல்லை. நிச்சயம் அதற்கு ஒரே ஒரு காரணம்தான் இருக்க வேண்டும். சுயநலம் தான் அது... உங்களை 'போர'டிக்கிறேனோ?...''

''இல்லே, இல்லே! சொல்லுங்கள்!''

''காலம் எதில் மாறினாலும், கல்யாண விஷயத்தில், வரதட்சிணை விவகாரத்தில் ஒரே மாதிரிதான் உள்ளது. திருமணமும் செய்து வைத்து, வரதட்சிணையும் கொடுத்து, வருகிற பண்டிகைகளுக்கெல்லாம் வகையாக ஒன்று விடாமல், சீர்வரிசை செய்துகொண்டு....'' சரண்யாவால் உணர்ச்சி வசத்தில் பேச முடியவில்லை.

''சரண்யா! நம் சமூக அமைப்பு எப்படியோ அமைந்துள்ளது. நமது நாட்டின் சட்டங்கள் ஒருவிதம், மனிதர்களின் சமுதாயத் திட்டங்கள் ஒரு விதம் என்று வாழ்க்கை முறையே ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் அமைந்திருக்கிறது. இதை நான் உணர்ந்தாலும்....''

''உங்களால் ஒன்றும் செய்ய முடியாது. அப்படித்தானே?''

''இல்லே, சரண்யா! என்னால் ஒன்று செய்ய முடியும். வரதட்சிணை இல்லாவிட்டால், இந்த விவாகம் கூடாது என்பது என் தாயின் வாதம். அந்த ரூபாய் ஐயாயிரத்தை நானே தந்து விடுகிறேன். இதனால் நீங்கள் வரதட்சிணைச் செலவைத் தவிர்க்கலாம். ''

''இப்படிச் செய்வதை விட, அதை வேண்டாம் என்று மறுத்தால் எவ்வளவோ கௌரவமாக இருக்குமே!''

''அது மெய்தான். ஆனால் சில ஏமாற்றங்களை என் தாய் தாங்கிக் கொள்ளச் சக்தியற்றவள். இந்த இடம் தேவையில்லை என்று தன் மனத்தை மாற்றிக் கொள்ளக் கூடும். நான் பணத்தை நாளையே தருகிறேன். உடனே ஊருக்குக் கடிதம் எழுதி விடுங்கள்....'' கனிவாகவும், வேண்டுகோள் போலவும் ஒலித்தது ராஜனின் குரல்.

சங்கரிக்கு இவரை மணக்க எத்தனை ஆசை என்ற ஞாபகத்தோடு மெல்லத் தலையசைத்தாள் அவள். ஆனால் அவள் மனத்தில் அவனைப் பற்றி உருவாகியிருந்த 'இமேஜ்' இலேசாக ஆட்டம் கண்டது.

திருமணக் களை கட்டிய வீட்டில் குறுக்கும், நெடுக்கும் நடந்து கொண்டிருந்தாள் சரண்யா. விடிந்தால் முகூர்த்தம். மாப்பிள்ளை வீட்டுக்காரர்கள் எதிர்த்த வீட்டில் இறங்கி இருந்தனர்.

இரவு நிச்சயதார்த்தம். பெண்ணை மணையில் உட்கார வைக்குமுன் ராஜனின் தாய் உள்ளே வந்தாள். நிச்சயதார்த்தப் புடவையைப் பார்க்க வேண்டும் என்றாள். சற்று நேரத்தில் ஒரு பிரளயமே உருவாகப் போகிறது என்று யார் எதிர்பார்த்தார்கள் ?

திடீரென ராஜனின் தாயார் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டாள். ''நிச்சயதார்த்தப் புடவையின் ஜரிகை இரண்டு விரலளவு தான் இருக்கிறது. நான்கு விரலளவாவது அது இருக்க வேண்டாமா? உடனே வேறு புடவை எடுத்து வராவிட்டால் இந்தத் திருமணம் நடைபெறாது.'' இப்படி அவள் கூப்பாடுபோட்டது மாலை மங்கி இருள் சூழப் போகும் நேரம். அன்று ஞாயிற்றுக்கிழமை. கடை திறந்திருந்தாலாவது மாற்றி எடுத்து வரலாம். என்ன செய்வது என்று கையைப் பிசைந்தாள் சங்கரியின் தாய். தந்தையோ நெஞ்சு குமுறச் சரண்யாவைச் சரணடைந்தார்.

விஷயத்தைக் கேட்டதும் சரண்யா வெகுண்டாள். ''அப்படி இந்த ஜரிகைக் கரையின் அகலம் சற்றுக் குறைவு என்பதற்காக இந்தத் திருமணம் வேண்டாமென்றால் அது நின்று விட்டுப் போகட்டும்'' என்று குமுறினாள்.

சங்கரி அவள் கைகளைப் பற்றிக் கொண்டு கண்ணீர் விட்டவாறே, ''சற்றுப் பொறுமையாக இரு. வார்த்தைகளை நீயும் கொட்டாதே'' என்று நயந்து கேட்டுக் கொண்டாள்.

சரண்யாவுக்கு ஒரு யோசனை தோன்றியது. நேரே ராஜன் தங்கியிருந்த இடத்துக்குப் போனாள். அவள் போவதைப் பார்த்துக் கொண்டிருந்த, அவன் தாய் பின்னோடு ஓடி மகனருகில் நின்று கொண்டாள்.

''இதோ பாரு சரண்யா! நான் சொன்னால் சொன்னதுதான். ஜரிகை அதிகமாப் போட்டதா உடனே ஒரு புடவை வரலேன்னா இந்தக் கல்யாணம் நடக்காது. என்ன பண்ணுவீங்களோ, ஒரு மணி நேரத்தில் வேறு புடவை வந்ததுன்னா நிச்சயதார்த்தம் நடக்கும். இதுக்குப் போய் அவன்கிட்டே என்ன சொல்லப் போறே? அவனோட கௌரவம் பாழாகக் கூடாதுன்னுதானே நான் இப்படிச் சொல்றேன்....''

''மாமி! தயவுபண்ணி யோசிச்சுப் பாருங்க.... இன்னிக்கு ஞாயிற்றுக்கிழமை

## தளராத நல்லெண்ணம் தேவை

சூரியனுடைய கிரணங்கள் நாலா பக்கமும் வீசிப் பரவினாலும் அதன் பிரகாசம் குறைந்து போவதில்லை. இருட்டறைக்குள் ஒரு துவாரத்தின் வழியாக வரும் வெளிச்சத்தைப் பார். அது நேராகப் பாயும். அதற்கு ஏதாவது தடையானாலும் அதன் மேலேயே தங்கும். அவ்விடத்தை விட்டு நகராது. உன் மனத்தின் போக்கும் எண்ணங்களும் அவ்வாறே இருக்க வேண்டும். தளராத நல்லெண்ணம் இருக்க வேண்டும். நேராய்ச் செல்ல வேண்டும். தடையைக் கண்டால் அதன் மேல் சூரிய வெளிச்சம் தங்குவது போல் உன் மனமும் தங்க வேண்டும். பலாத்காரமும் கொடுமையும் கூடாது. தடையைக்கண்டு வெறுப்பு அடையாமல் அதன் மேல் பிரகாசித்துக் கொண்டே இருக்க வேண்டும். வெளிச்சம் ஊடுருவிச் செல்லவிடாமல் ஏதேனும் தடுத்தால் அது அதன் குற்றமேயன்றி, பிரகாசிக்கும் கிரணங்களின் தவறு அல்ல.

—ஆத்ம சிந்தனை

கடை திறந்திருக்காது. நாங்கள் எங்கே போய் எந்தப் புடவையை எடுக்க முடியும்? அடுத்து வரும் பண்டிகைகளுக்கு நிறைய ஜரிகைக் கரை போட்ட புடவையாக எடுத்துடறோம். தயவு செய்து, பெரிய மனசு பண்ணி நிச்சயதார்த்தத்தைத் தள்ளி வைக்காதீங்க மாமி....''

''இல்லேடி பொண்ணு! நீ என்ன சொன்னாலும் என் கிட்டே எடுபடாது.''

இந்தக் கண்டிப்பான பதிலைக் கேட்டுச் சரண்யா விக்கித்து நின்றாள். ஆனால் அடுத்த கணமே ஓர் ஒளி பளிச்சிட்டது.

'அவளுக்கென்று திருமணத்துக்கு எடுத்த பட்டுப் புடவை நான்கு விரலளவு ஜரிகை உள்ளதாயிற்றே!... சரண்யா எத்தனை தடுத்தும் சங்கரி வற்புறுத்தி அவளுக்காக வாங்கியதாயிற்றே? அதை எடுத்து நிச்சயதார்த்தத்துக்கு வைக்க வேண்டியதுதானே? ஏன் இத்தனை நேரம் இது தோன்றவில்லை?' சரண்யா காற்றெனத் திரும்பி வந்தாள்.

''உனக்குன்னு எடுத்த புடவையாச் சேடி சரண்யா?'' சங்கரி கண் கலங்கக் கேட்டாள்.

''உனக்குன்னு நடக்க இருக்கும் கல்யாணத்துக்குத்தானே எனக்குன்னு அதை எடுத்தே. அந்தக் கல்யாணம் நடக்கலேன்னு, இந்தப் புடவையை நான் ஏன் கட்டிக்கப் போறேன்? இப்போ வேறே வழியில்லே...''

நிச்சயதார்த்தம் நடந்து கொண்டிருந்தது. தான் ஜெயித்து விட்டோம் என்ற வெற்றி மமதையில் மிதந்தாள் ராஜனின் தாய்.

'**பா**வம், அக்கா! எப்படித்தான் இந்த வாயாடி மாமியாரிடமும், வாயில்லாப்பூச்சியான ராஜனிடமும் வாழ்ந்து குப்பை கொட்டப் போகிறாளோ?'

கல்யாணம் முடிந்த பின் நிமிர்ந்து சங்கரியைப் பார்த்தாள் சரண்யா. சங்கரியின் முகம் அவள் எதிர்பார்த்தாற்போல் வாடியிருக்கவில்லை.

காற்று மழை அடித்த பின்னும் கூடச் சில புஷ்பங்களும், துளிர் இலைகளும், தன் பசுமையையும் மென்மையையும் இழக்காமல் பதுங்கிக் கிடந்து மெல்லக் காற்றில் அசையுமே! அதுபோல், சங்கரியின் முகத்தில் ஒரு தனி விகசிப்பு படர்ந்திருந்தது. தனிமையிலும், ஒருமையிலும், செய்திருந்த கற்பனைகளும், கொண்டிருந்த மனத் தாகங்களும் நிறைவேறி விட்டாற் போன்ற ஒரு பூரிப்பில், அவள் மெல்லிதழ்கள் ராஜனிடம் ஏதோ பேசிக் கொண்டிருந்தன. ராஜனின் பார்வையில் படர்ந்திருந்த அன்பும், கனிவும் சங்கரியை ஒருபுதியநம்பிக்கை உள்ள உலகுக்கு அழைத்துச் சென்று கொண்டிருந்தன.

ஊருக்குப் புறப்படும் பொழுது ஆத்மார்த்தமாக ''சரண்யா! நீ இல்லாவிட்டால் இந்தத் திருமணமே நடந்திருக்காது. உன் புடவையை சட்டெனத் தூக்கிக் கொடுத்தாயே. அவர் ரொம்ப நல்லவர்டி!'' என்றாள் சங்கரி.

சரண்யாவுக்கு முணுக்கென்று கோபம் வந்து. ''அவரை நல்லவர் என்று என்னிடம் சொல்லாதே. சுயநலவாதி, சந்தர்ப்பவாதி என்று வேண்டுமானால் சொல்லு'' என்றாள்.

சங்கரி அவள் வாயைப் பொத்தினாள். ''ப்ளீஸ், சரண்யா! ஏதாவது சத்தம் போட்டுப் பேசி என் வாழ்க்கையைக் கெடுத்து விடாதே....''

''எல்லோருமே தன் நலம் கெடாமலிருக்கச் சாமர்த்தியமாகப் பேசுகிறீர்கள். உனக்குக் கணவன் தயவு வேண்டும். அவன் எப்படிப்பட்டவனாக இருந்தாலும் நல்லவன் என்று கூற வேண்டும். உன் புடவையைக் கொடுத்தாயே, கொடுத்தாயே என்று வீணாக ஏன் பேசுகிறாய்? உன் புடவையைக் கொடுக்காதே. இந்தக் கல்யாணம் இதற்காக நின்றால் நிற்கட்டும் என்று தைரியமாகக் கூற உனக்கு உறுதியில்லை. படித்துப் பட்டம் பெற்று என்ன பயன்? அவன் உன்னை மறுத்து விடுவானோ, வெறுத்து விடுவானோ என்று இல்லாததை எல்லாம் சொல்லிக் கணவனைச் சந்தோஷ மூட்டுகிறாய். உன்னைப் போன்ற பெண்களுக்கு இந்த அடிமைப் புத்தி ஓயும் வரை, இந்த ஆண் வர்க்கத்தின் அதிகாரமும் ஓயப் போவதில்லை.''

''சரண்யா! ஏன்டி இப்படிக் கோபப் படறே? நாளைக்கே உனக்குக் கல்யாணமானால் தெரியும்.''

''ஸாரி அக்கா! உனக்குப் பெரிய கும்பிடு. எனக்குக் கல்யாணமும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம்.''

**ரா**ஜனிடமிருந்து அழைப்பு மணி ஒலித்த போது நோட்டுடன் உள்ளே நுழைந்தாள் சரண்யா.



''இன்னும் கொஞ்சம் ஸ்பீடாக ஓட்டு பட்டு !''



முதற் பார்வையிலேயே ராஜுவின் முகத்திலும், உடம்பிலும் மலர்ச்சியும், பூரிப்பும் ஏற்பட்டிருப்பதை நோட்டமிட்டாள். ஒரு புதிய பிடித்தமான வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் உற்சாகம் கண்களில் பிரதிபலித்தது.

''உடம்புக்கு ஒன்றுமில்லையே சரண்யா?''

''நன்றாகவே இருக்கிறேன் ஸார்!''

''ஒரு வாரம் 'லீவ்' போட்டிருந்தாயே என்று பார்த்தேன்.'' மனைவியின் தங்கை தானே என்ற பிரக்ஞையில் ஒருமையில் அழைத்தான் அவன்.

''எல்லாவற்றையும் பங்கீடு செய்துவிட்டு வந்தேன் ஸார்! ஆடிக்குப் புடவை, வேஷ்டி எடுத்து வைத்து விட்டு, தீபாவளிக்குக் கொஞ்சம் பெரிய பட்ஜெட் போட்டுப் பணத்தைக் கூடவே வைத்து விட்டு, இன்னும் வரப் போகும் செலவுகளுக்கு எல்லாம் ஓர் ஏற்பாடு செய்துவிட்டு... ஸாரி ஸார்! உங்கள் ஐயாயிரம் ரூபாயைக் கொஞ்ச நாட்கள் கழித்துத் தந்து விடுகிறேன்.''

''சரண்யா! உனக்கு என்மேல் கோபம் என்பது புரிகிறது. இதைப்பற்றி வீட்டுக்கு வந்தால் சாவகாசமாகப் பேசலாம். உன் அக்கா நீ வந்ததும் உன்னை அழைத்து வரும்படி கூறினாள்.''

''ஒருநாள் வருகிறேன் ஸார்!''

''மிஸ் சரண்யா! ஒரு அப்ளிகேஷன்... நம் கான்டீன் விஷயமாக மானேஜரிடம் சிபாரிசு செய்ய வேண்டும். மானேஜர் உங்கள் ஸிஸ்டர்ஸ் ஹஸ்பெண்டாமே?'' என்றவாறே அடுத்த செக்ஷனில் வேலை செய்யும் ரமணி அவளிடம் வந்தான்.

''ஸாரி, மிஸ்டர் ரமணி! மானேஜர் என் உறவினர் என்று எவ்வித சொந்தமும் நான் கொண்டாடுவதில்லை....''

''நிஜமாகவா? இப்படி உறவினர்களை உதவும்படி தூண்டுவதும், உறவினர்களுக்கு உதவுவதும் இல்லாவிட்டால் நம் நாட்டில் தகுதியுள்ளவர்கள் எல்லாம் தமக்குரிய பெருமையோடு ஜொலிக்க முடியும்...''

''உங்களை நான் ஆமோதிக்கிறேன்.''

இப்படி ஆரம்பித்த அவர்கள் பழக்கம் இருவருக்கும் பிடித்த ஓர் அந்நியோன்யத்தில் மிருதுவாகக் கனிய ஆரம்பித்தது.

''சரண்யா! உன்னை என் சகோதரியும், அம்மாவும் ஆவலுடன் எதிர்பார்க்கிறார்கள். இன்று மாலை நீ என்னோடு வருகிறாய், ஞாபகமிருக்கிறதா?'' முகத்தில் அன்பு கனிய, ஆசைக் கனவுகளில் கண்கள் மிதக்க ஞாபகப் படுத்தி விட்டுச் சென்ற ரமணி ஆபீஸ் முடிந்த போது ஸ்கூட்டரோடு சரண்யாவின் அருகில் வந்து நின்றான். அவளைப் பின்னால் ஏற்றிக் கொண்டு ஒரு கனவுலகப் பிரயாணம் தொடர இருந்த அவனுக்கு அவள் பதில் சற்று ஏமாற்றமாக இருந்தது. ''ஸ்கூட்டர் பிரயாணம் எல்லாம் இப்போது வேண்டாம். பஸ்ஸிலேயே போகலாம்'' என்ற அவளது கோரிக்கையை ஏற்றுக் கொண்டு ஸ்கூட்டரை ஆபீஸிலேயே வைத்துப் பூட்டிவிட்டு, அவளை அழைத்துக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டான்.

''என்ன சரண்யா! துணைக்கு ரமணியை அழைத்து வந்தாயா?''

''ஆமாம் ஸார்! எனக்கு உறுதுணையாக இருப்பார் என்ற நம்பிக்கை ஏற்பட்டிருப்பதால்....!'' சமயோசிதமாகத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டாள் சரண்யா.

சங்கரி புரிந்து கொண்டவளாய் அவனைப் பார்த்தாள். ரமணி அழகாகவே இருந்தான். பண்பாடு உள்ளவன் என்று பார்த்தாலே தெரிந்தது.

சங்கரி அனைவருக்கும் காப்பி கொணர்ந்தாள்.

''ரமணி! கன்கிராஜுலேஷன்ஸ்! சரண்யாவைப் போல் ஒரு பெண்ணை மணக்க நீங்கள் கொடுத்து வைத்திருக்கிறீர்கள்! அதேபோல் உங்களைப் போன்ற பண்புள்ள ஒருவரை மணக்கச் சரண்யாவும் கொடுத்து வைத்திருக்கிறாள்!''

''தேங்க் யூ ஸார்!''

''அப்பாவுக்குத் தெரியுமா?'' மெல்லக் கேட்டாள் சங்கரி.

''அதற்கு அவசரமில்லை'' என்றாள் சரண்யா.

''ஏன் சரண்யா! மனம் ஒத்துப் போன பின் வாழ்க்கையைத் தொடருவதுதான் நல்லது.''

''அதிலே ஒரு சின்ன சிக்கல் ஸார்.''

''ஏன் ரமணி, உங்கள் வீட்டில் ஏதாவது....''

''ஆமாம் ஸார்! பட்டுப்புடவை விஷயம்!''

''பட்டுப் புடவை விஷயமா? ... சரண்யா! பார்த்தாயா? உலகிலுள்ள எல்லா மாமியார்களும் அப்படித்தான் இருப்பார்கள். பட்டுப் புடவையின் ஜரிகை அகலமாக இருக்க வேண்டும் என்பதில் பெண்களுக்கு ஒரு பைத்தியம் உண்டு'' என்று தன் தாயால் சரண்யாவுக்கு ஏற்பட்ட வருத்தத்தைப் போக்க முயன்றான் ராஜுன்.

''அதில்லை ஸார் பிரச்னை. சரண்யா பட்டுப் புடவை கட்டுவதில்லை என்று தீர்மானித்து விட்டாளாம். அதனால் திருமணத்தின் போது மணையில் அமரும் போது கூடப் பட்டுப் புடவை கட்ட மாட்டேன் என்கிறாள். என் அம்மா முகூர்த்த வேளைக்கு மட்டும் கட்டிக் கொள், அப்புறம் உன் இஷ்டம் என்கிறாள். அதில் கூடச் சரண்யாவுக்குச் சம்மதமில்லை.''

ராஜுனால் இப்பிரச்னைக்கு ஒரு தீர்வு கிடைக்குமோ என்ற நப்பாசையில் கூறினான் ரமணி.

''சரண்யா! இது வீண் பிடிவாதமாகப்படுகிறது!'' அறிவுரை கூறும் வாய்ப்பைப் பயன்படுத்தும் உரிமையோடு ஆரம்பித்தான் ராஜுன்.

''எனக்குப் படவில்லை... இந்தப் பட்டுப் புடவைகளால் நேரும் சண்டையும், உண்டாகும் மனஸ்தாபங்களும், நம் நாட்டுப்

வாடிக்கையாளர்களுக்கும், ஆதரவாளர்களுக்கும் எமது
**பொங்கல் நல் வாழ்த்துக்கள்!**

எல்லா விசேஷ காலங்களுக்கும்
தரமான நம்பகமான ஆபரணங்கள்
வெள்ளிப் பாத்திரங்கள் வாங்கு
வதற்கு நம்பிக்கை வாய்ந்த இடம்




# ஜாவேரி



**நட்வர்லால் கோவிந்த்ஜி ஜாவேரி**
நகை வியாபாரிகள்

264-C. அம்ருதலால் மேன்ஷன்
நாப்பூ ரோடு, மாதுங்கா (C. Ry.)
பம்பாய்-400 019 போன்: 473526

---

அறிவை
வளர்க்க
அரிய
வாய்ப்பு!



# குழந்தைகள் கலைக்களஞ்சியம்

## CHILDREN'S ENCYCLOPEDIA

**10** தொகுதிகள் ஒவ்வொன்றும்
விலை ரூ. 10*

ஆயிரத்திற்கும் அதிகமான கட்டுரைகளும்
கண்ணைக் கவரும்
வண்ணப்படங்களும் நிறைந்தது

*அடக்க விலை ரூ. 12 விலை குறைத்து ரூ. 10க்கே விற்கப்படுகிறது

ஓரியண்ட் லாங்மன் 36ஏ அண்ணா சாலை சென்னை 600 002

தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு

பெண்களிடையே, ஒரு பெரிய கௌரவமாகப் போய் விட்டது. அவரவர்கள் பிரியப்படி புடவைகள் உடுத்த வேண்டும். மாமியாருக்காக, மருமகளுக்காக என்றெல்லாம் வேண்டாம் என்பது என் தீர்மானம். அதில் நான் பிறழப் போவதில்லை.''

''வாழ்க்கையில், கொண்ட அன்பு கூட வேண்டுமானால் சின்ன விஷயங்களில் விட்டுப் பிடிக்க வேண்டும், சரண்யா!''

''இவை சின்ன விஷயங்கள் இல்லை ஸார்! என் விருப்பத்துக்கு எதிராக இந்த விஷயங்களில் பிறர் தலையிடுவது விவேகமல்ல. நான் உடுத்தும் புடவையைப் பற்றிப் பிறர் தீர்மானிப்பானேன்?''

''என் அம்மாவால் உனக்கு ஏற்பட்ட கசப்பு அது. அதற்காக....''

''உண்மைதான்! ஜரிகை அகலம் போதாதென அன்று உங்கள் தாய் பண்ணிய ஆர்ப்பாட்டத்தில், கல்யாணத்தை நிறுத்தி விடுவேன் என்று அச்சுறுத்திய பயத்தில், என் புடவையை எடுத்துத் தந்தேனே, அப்போது தீர்மானித்ததுதான் இது.''

''சரண்யா! அதை எல்லாம் மறந்துடு! பழங்காலச் சம்பிரதாயம் அப்படி. என் மாமியார் என்னை நல்லாத்தான் நடத்துகிறார்கள். என் கணவர் என் மீது உயிராக இருக்கிறார். இது நிதர்சன உண்மை என்னும்போது, என் வீட்டார் மீது நீ ஏன் கோபப்படுகிறாய்?''

''சங்கரி அக்கா! உன் உபதேசம் போதும். என்ன கல்யாணத்துக்கப்புறம் ஒரு பெண் நம்நாட்டிலே சுயநலமியாகப் போயிடறாள்!''

''அப்போ, இவருக்கு என்னமுடிவு?'' ரமணியைச் சுட்டிக் காட்டிக் கேட்டாள் சங்கரி.

''அதை அவர்தான் தீர்மானிக்கணும். என் தீர்மானம் மாறப் போவதில்லை....நான் வரேன் அக்கா!'' எழுந்தாள் சரண்யா.

''அம்மாவை எப்படியாவது பட்டுப் புடவை விவகாரத்தில் சமாளித்து நம் திருமணத்திற்கு ஏற்பாடுசெய்கிறேன் சரண்யா!''

''நல்லது ரமணி! வெறும் உணர்ச்சிகளைக் கண்டு நாம் ஏமாந்தால் நம் வாழ்க்கைப் பாதையில் அந்த உணர்ச்சிகளே வெறும் முட்களாக நிறைந்து உறுத்த ஆரம்பிக்கும். நாம் சில புதிய நடைமுறைகளைப் பின்பற்றுவதில் அச்சமோ, தயக்கமோ காட்ட வேண்டாமே ... ஒரு பெண் பட்டுப்புடவை உடுத்தாமல் தன் வாழ்க்கையைத் தொடர முடியாதா? அப்படி என்ன இருக்கிறது அந்தப் பட்டுப் புடவையில்?''

இரவின் பனி பூசிய குளிர்ச்சியில் மங்கலான தெருவிளக்குகளின் ஒளியில், அவள் முகத்தைப் பார்த்தவாறே நடந்த ரமணிக்கு, ஒரு தேவதையுடன் நடந்து செல்லும் பெருமிதம் ஏற்பட்டது. எவ்வளவு அழகாகச் சொல்கிறாள், வெறும் உணர்ச்சிகளுக்குப் பலியாகாமல், சில புதிய நடைமுறைகளை ஏற்பதில் தயக்கம் காட்டக் கூடாது என்று ...ஆமாம்! காலம் காலமாய்ப் பட்டுப்புடவை கட்டியே மணமகள் மணையில் அமர்ந்திருக்கிறாள். - உண்மைதான்! அதை சுயராஜ்ய போராட்ட காலத்தில் காந்தியவாதிகள் முறியடித்துக் கதர்ப்புடவை உடுத்தி மணம் புரிந்துகொள்ளவில்லையா? அந்த எளிமையின் உருவாக வாழ்ந்தவர்கள் எல்லாம் இந்த நாட்டின்

## கண்ணான கண்டக்டர்!



பம்பாய் பி.இ.எஸ்.டி. பஸ் சர்வீஸில் ஒரு ரூட்டில் ரொம்ப நாள் வேலை செய்து பிரயாணிகளைக் கவர்ந்த ஒரு கண்டக்டரை வேறு ரூட்டுக்கு மாற்றி விட்டனர். அவருக்குப் பிரயாணிகள் எல்லோரும் சேர்ந்து மாலை போட்டு விடை கொடுத்தனர். பலர் அவரைப் பாராட்டிப் பேசினர். அவருக்கு ஒரு சிறு பரிசு கொடுக்கப்பட்டது. இவ்வளவும் அந்த பஸ் ஓடிக்கொண்டே இருக்கும் போது நடந்தது.

- டைம்ஸ் ஆப் இந்தியா — - பாபு

---

மேன்மைக்குப் பாடுபடும் பாக்கியம் பெறவில்லையா? இந்த நாட்டையே ஆளும் தகுதி பெறவில்லையா? அலுவலகத்திலே பணி புரியும் ஒருத்தி அப்படிப்பட்ட மேன்மைக்கு வித்திடும் எளிமையைப் போதிப்பதுடன், தானே செயலிலும் காட்ட முன்வந்தால், அதை என்னுவதோ, புறக்கணிப்பதோ நியாயமா?

அன்று அவள் அலுவலகத்துக்கு வந்த பொழுது, அவள் மேஜையில் ஒரு சிறு குறிப்பு வைக்கப்பட்டிருந்ததைக் கண்டாள். ''ஒரு முக்கிய விஷயம். நீ இன்று என் வீட்டுக்கு வருகிறாய் ... அதாவது 'நம்'!''

ஒன்றும் புரியாமல் முதலில் விழித்தாள். பிறகு ஏதோ ஊகித்தாள்.

முதல் தடவை போலவே ஸ்கூட்டரை ஆபீஸிலேயே பூட்டிவிட்டு, தன்னுடன் பஸ்ஸில் புறப்பட்ட ரமணியைக் கண்டு மெல்ல நகைத்தாள்.

''என்ன சரண்யா சிரிக்கிறாய்?''

''உங்களைப் பார்த்தால் பாவமாக இருக்கிறது!''

''அப்படியா?''

''வாம்மா சரண்யா! உட்கார்!'' என்று வாய் நிறைய அழைத்து, மனம் நிறைய மகிழ்ந்த ரமணியின் தாய், ''நீ சொன்னதை எல்லாம் நான் யோசித்தேன். உன்னுடைய கொள்கை ரொம்ப உயர்ந்த கொள்கைதான். இந்த விஷயத்தில் நான் விட்டுக் கொடுக்கலைன்னு, அன்போடு இணைஞ்சுட்ட உங்க மனசைப் பிரிச்சுப்போட்ட மாதிரிதானே? நீங்களும்தான் இன்னும் எத்தனை காலம் இப்படி ஒருத்தருக்கொருத்தர் ஏங்கிக் காத்திருப்பது? அதனாலே உன் இஷ்டப்படியே பட்டுப்புடவை வேண்டாம். நீ இந்த வீட்டுக்கு வந்ததும், உனக்குத் தோன்றுவது போல்தானே இந்தக் குடும்பத்தைக் கட்டிக் காப்பாற்றப் போகிறாய்! அதனால் உன் பிரியத்துக்கே மதிப்புத் தருகிறேன்!'' என்றாள்.

சரண்யா புல்லரிக்க நிமிர்ந்தாள். தன் எதிரே உள்ள மூத்த பரம்பரையைச் சேர்ந்த முதியவள் ஒருத்தி, இளைய தலைமுறையினரின் ஆசையை மதித்து வழி தருகிறாள் என்றால் அது எத்தனை பெரிய விஷயம்?

சட்டெனச் சரண்யா அவள் காலடியில் விழுந்து வணங்கினாள். ''அத்தை! நீங்கள் என் வரப்போகும் மாமியார் என்பதற்காக மட்டும் உங்களை வணங்கவில்லை நான். ஒரு லட்சியத்தை, அதன் கன பரிமாணத்தை உணர்ந்து ஏற்றுக் கொண்ட உங்கள் விவேகத்துக்காக உங்களை வணங்குகிறேன்...!'' இப்படிக் கூறும்பொழுது சரண்யாவின் உடலோடு உள்ளமும் புல்லரித்தது.



# உங்கள் குடும்பத்தின் அளவு சரியாயிருக்கிறதா?

## குட்மார்னிங் டாக்டர்!

## ஆண்களுக்கு!

"எனக்கு வயது முப்பத்து நாலு. மூன்று குழந்தைகள். இதற்கு மேல் குழந்தைகள் வேண்டாமென்று நினைக்கிறேன். நான் குடும்பக் கட்டுப்பாடு முறைகளைக் கடைப் பிடிக்கலாமா, அல்லது அறுவைச் சிகிச்சை செய்து கொள்வது நல்லதா?" என்று கேட்டார், பிரகாஷ்.

"அறுவைச் சிகிச்சைதான் உகந்தது. உங்கள் மனைவியின் சம்மதத்தையும் எழுத்து மூலம் பெற்றுக் கொண்டு வந்தால் ஆபரேஷன் செய்து கொண்டு விடலாம்."

"மனைவியின் ஒப்புதல் பெற்றுக் கொண்டு வந்திருக்கிறேன். ஆபரேஷன் செய்து கொண்ட பின் எத்தனை நாட்கள் அலுவலகத்துக்கு லீவு போட வேண்டியிருக்கும்? மயக்க மருந்து கொடுத்து ஆபரேஷன் செய்வீர்களா, டாக்டர்?"

"மயக்க மருந்து தேவையில்லை. வலி தெரியாமல் இருக்க இரண்டு ஊசி போட்டுக் கொண்டால் போதும். ஐந்து, ஆறு நிமிடங்களுள் ஆபரேஷன் முடிந்து விடும். அறுவைச் சிகிச்சை நடந்து கொண்டிருக்கையில் என்னோடு நீங்கள் இதேபோன்று உரையாடிக் கொண்டிருக்கலாம். நீங்கள் அன்றைய தினமே வீடு திரும்பி விடலாம். ஒரு வாரம் அலுவலகத்துக்கு விடுப்பு எழுதிப் போட்டால் போதும்" என்று விளக்கியதும் பிரகாஷ் சம்மதித்து விட்டார். அவருக்கு இரத்த அழுத்தம் இல்லை என்பதையும் நீரிழிவு வியாதி இல்லை என்பதையும் இதயம் சீராக இயங்குகிறது என்பதையும் சோதனை செய்து உறுதி செய்து கொண்டு மறுநாள் அவரை ஆபரேஷனுக்குத் தயாராக வரும்படி கூறினேன். பிரகாஷுக்கு அறுவைச் சிகிச்சை முடிந்த ஆறாவது நாள் தையல் பிரிக்கப்படும். மேலும் ஒருநாள் ஓய்வெடுத்துக் கொண்டு மறுநாள் அவர் அலுவலகம் செல்லலாம் எனக் கூறிப் பிரகாஷுக்கு விடை கொடுத்தேன்.

**"குடும்பக் கட்டுப்பாட்டுக்கு இந்த சஸ்திர சிகிச்சை எவ்வாறு உதவுகிறது? எந்த உறுப்பு வெட்டப்படுகிறது?"**

"ஆணின் தாதுவில் உள்ள ஸ்பர்ம் (Sperm) எனப்படும் ஜீவ அணுக்கள்தாம் பிரஜா உற்பத்திக்குக் காரணமானவை. பீஜங்களில் உற்பத்தியாகும் இவை 'வாஸ்' (Vas) எனப்படும் மெல்லிய குழாய்களின் வழியே மேல் நோக்கிச் செல்கின்றன. இடது வலது இருபுறமும் ஒன்றாக அமைந்துள்ள இக் குழாய்கள் பென்சிலுக்குள் பொருத்தப் பெற்றுள்ள 'லெட்' அளவுக்கு மெல்லியவை. இக்குழாய்கள் ஒவ்வொன்றிலும் ஓர் அங்குல நீளம் வெட்டி, வெட்டப்பெற்ற இரு முனைகளையும் கட்டி விட்டால் ஜீவ அணுக்களின் போக்குவரத்து தடைப்பட்டுவிடும். இந்த அறுவைச் சிகிச்சை தான் 'வாஸெக்டமி' (Vasectomy). இது முடிந்து ஒரு வாரத்துக்குக் குளிக்காமல் இருக்க வேண்டும். உணவுக் கட்டுப்பாடு ஏதுமில்லை."

**"இச் சிகிச்சை செய்து கொண்ட பிறகு எவ்வளவு காலம் வரை உடலுறவு கொள்வதைத் தவிர்க்க வேண்டும்?"**

"ஆறு வார காலம் உடலுறவைத் தவிர்ப்பது நலம். வெட்டப் பெற்ற குழாய்களின் கீழ்ப் பகுதியில் தாது (Semen) சிறிது தேங்கி நிற்கும். தாது என்பது புரதங்கள் அடங்கியது. ஜீவ அணுக்கள் கலந்த இந்தத் தாதுவினால் மனைவி கருத்தரிக்கும் வாய்ப்பு ஏற்படாமல் உறுதி செய்துகொள்ள இந்த இடைவெளி தேவை."

**"இச் சிகிச்சையினால் உடலிலோ மனத்திலோ பாதகமான விளைவு ஏதாகிலும் ஏற்பட வாய்ப்பு உண்டா? ஆண்மைக் குறைவு ஏற்படும் என்று சிலர் கூறுகிறார்களே?"**

"அது முழுப்பொய். அப்படி ஏதும் ஏற்படாது. உடல் பருத்து விட்டால் இதனால் தான் பருமனாகியது எனச் சிலர் கருதலாம். அதுவும் வெறும் பிரமைதான்."

**"அறுவைச் சிகிச்சை செய்து கொண்ட ஓர் ஆண், தன் குழந்தைகளைத் துரதிருஷ்டவசமாக இழக்க நேரிட்டால், அதன் பிறகு என்றென்றைக்கும் அவர் குழந்தை பெற்றுக் கொள்ள வழியே இல்லையா?"**

"உண்டு. வெட்டப் பெற்ற குழாய்களுக்கு இடையே ஒரு நைலான் குழாயைப் பொருத்தி விட்டால் அவர் மீண்டும் தந்தையாகும் வாய்ப்பு உண்டு. இந்த மறு சிகிச்சைக்கு (Re-canalisation) எனப் பெயர். சின்ன வயதுள்ள இரு குழந்தைகளை விட்டு விட்டு மனைவி எதிர்பாராதவிதமாக உயிர் இழக்க நேர்ந்தால் அக் குழந்தைகளை வளர்க்கும்பொருட்டு ஒருவர் மறுமணம் செய்து கொள்ள விழையலாம். இரண்டாவது மனைவி தனக்கென்று ஓரிரு குழந்தைகள் பெற்றுக் கொள்ள ஆசைப்படுவது இயல்பு. அந்த நிலையில், 'வாஸெக்டமி' ஆபரேஷன் ஏற்கனவேயே செய்து கொண்ட ஆண் 'ரீ-கானலைஸேஷன்' எனப்படும் இச் சிகிச்சையின் மூலம் மீண்டும் தந்தையாகும் வாய்ப்பினைப் பெறலாம்."

டாக்டர் எஸ். ஜகதீசன் கூறக்கேட்டு
எழுதியவர்: ஆர். பி.

# உடலின் மேலோடு உள்ள தொல்லையை





# ஆழ்ந்து அகற்றும் களிம்பு—
# அமிர்தாஞ்சன் டெர்மல் ஆயின்ட்மென்ட்

சாதாரண களிம்புகள் சருமத்தின் ஆழம்வரை எட்டாது. ஆனால் அமிர்தாஞ்சன் டெர்மல் ஆயின்ட்மென்ட் இதை எட்டும். ஏனெனில், சக்திவாய்ந்த சரும நிவாரணிகளின் அபூர்வக் கலவை இது. சாதாரண சரும நோய்களின் ஆதாரத்தை இது எட்டும்; உடனடியாக அகற்றும்; இயல்பான ஆரோக்கிய சருமத்தை வெளிப்படுத்தும்.

அமிர்தாஞ்சன் டெர்மல் ஆயின்ட்மென்ட், படை, சொறி, மற்றும் பல சரும நோய்களுக்கும் ஏற்ற லட்சிய நிவாரணி. இன்றே ஒன்று வாங்குங்கள்!




**அமிர்தாஞ்சன் லிமிடெட்** 14/15 லஸ் சர்ச் ரோடு, சென்னை 600 004

SAA/AM/1906 R.

# சேரமான் காதலி

## அத்தியாயம் 8

## மணிமண்டபம் அடைந்தாள்

யூஜியானாவின் ஓவியத்தைப் பார்த்த சலீமா, கொஞ்ச நேரம் திகைத்து நின்றாள்; பிறகு ஜெபுன்னிஸாவுக்குத் தெரியாமல் அதை மூடி வைத்துக் கொண்டாள்.

இல்லம் போய்ச் சேருகிறவரையில் அவள் எதுவும் பேசவில்லை.

'காதலின் ஜீவசக்தி எத்தகையது' என்பதை அப்போதுதான் அவளால் உணர முடிந்தது.

மன்னவர் குலமே கைகட்டி நிற்கும் ஒரு மாமன்னன், ஒரு சாதாரணப் பெண்ணை இவ்வளவு காலம் மார்பிலே சுமந்து கொண்டிருக்கிறான்; அவளது நினைவாக இந்தப் பதக்கத்தையும் பாதுகாத்திருக்கிறான்.

. இப்போது அந்தப் பந்தம் அடியோடு அறுபட்டு விட்டது என்பதன் அடையாளமாகத்தான் பதக்கம் கீழே விழுந்திருக்கிறதா?

பதக்கங்கள் அறுந்து போகலாம்; பந்தங்கள் அறுந்து போகலாம்; பாசம் என்ன அறுந்து போகக் கூடிய ஒன்றா?

ஆம்! அதுவும் உண்டுதான்.

'காலம்' என்னும் மருத்துவன் அதையும் கூடத்தான் கத்தி வைத்து வெட்டி விடுகிறான்!

கேள்விக் குறிகளில் சிக்கிக் கொள்ளாத இளம் சிட்டு சலீமாவுக்கு வயது வளர்ந்து கொண்டிருந்தது. ஆகவே, கேள்விக் குறிகளும் அவள் மீது விழுந்து கொண்டிருந்தன.

முதலில் அது கண்களில் விழுந்தது. இப்போது இதயத்தில் விழுந்திருக்கிறது.

இனி அது தேகத்தை ஆக்கிரமிக்கக் கூடும்.

இல்லம் வந்த சலீமா அறைக் கதவைத் தாளிட்டுக் கொண்டு அந்த ஓவியத்தை மீண்டும் பார்த்தாள்.

தன் பெட்டியைத் திறந்து, தன்னுடைய பதக்கம் இருந்த சிப்பிச் சிமிழில் அதையும் வைத்தாள்.

அந்தச் சிமிழ் ஓர் இருதயத்தின் வடிவிலேயே அமைந்திருந்தது.

'ஒவ்வொரு காரியத்துக்கும் காரணம் உண்டு' என்பதை எண்ணிக் கூடப் பார்த்திராத சலீமா, இப்போது எண்ணவும் தலைப்பட்டாள்.

கடந்த மூன்றாண்டுகளில் மலையாளக் கொடுந்தமிழில் அவளுக்கு ஏற்பட்ட பயிற்சியும், மன்னவர் இடத்தில் ஏற்பட்ட பக்தியும் கேரள தேசத்தின்மீது ஏற்பட்ட பாசமும் அவளை ஒரு கேரளப் பெண்ணாகவே மாற்றியிருந்தன.

சில நினைவுகளை அவள் ஜெபுன்னிஸாவிடம் கூட மறைக்கத் தலைப்பட்டாள்.

மறுபடியும் அரண்மனைக்குச் சென்று மன்னரைப் பார்த்து, பதக்கத்தைக் கொடுத்து விட்டு வர வேண்டும் என்று அவளுக்குத் தோன்றிற்று.

அப்போதும் ஜெபுன்னிஸா கூட வருவதை அவள் விரும்பவில்லை. அதனால், தான் போக நினைத்ததை அவளுக்குச் சொல்லவில்லை.

ஒரு பெண்ணின்மீது காதல் கொண்ட ஆடவன், அந்தக் காதலில் திடமாக இருப்பதை அறிந்தால், மற்றப் பெண்களுக்குக்கூட அவனிடம் ஒரு பற்றுதல் வரும்.

செம்மையான காதலில் ஈடுபட்ட உள்ளங்களைப் பிற மென்மையான உள்ளங்கள் நேசிப்பது இயற்கை.

சலீமாவுக்குச் சேரமானிடம் ஏற்பட்டது என்ன?

இனம் புரியாத ஓர் உணர்ச்சி; சுகமான ஒரு வேதனை.

அன்றைய இரவு முழுதும், மறுநாள் தான் அரண்மனைக்குப் போவது பற்றியே அவள் சிந்தித்துக் கொண்டிருந்தாள்.

ஜெபுன்னிஸாவின் பாடல் இப்பொழுது அவளுக்கு வேதனையாகத்தான் இருந்தது.

மன்னவனை எந்த நேரத்தில் பார்க்கலாம் என்று அவளுக்குத் தெரியாது;

கண்ணதாசன்

வலது புறக் கூந்தலோடு சேர்த்துச் செருகப்பட்டு, இடதுபுறமாக ஒதுக்கி விடப்பட்ட ஒரு பழுப்பு நிற முக்காடு, கார்மேகமும் செவ்வானமும் கலந்து நிற்பதைக் காட்டிற்று.

அரை முகத்தை மூடும் சாதாரண கறுப்புச் சல்லாத் துணிக்குப் பதிலாக ஜரிகை தைத்த சல்லாத் துணியையே அணிந்து கொண்டாள்.

அராபிய பாணியில் காதணிகள் ஊஞ்சலாடின.

கண்ணாடியில் தன்னை மீண்டும் மீண்டும் பார்த்துக் கொண்டாள்.

புறப்பட்டு வெளியே போன பிற்பாடு தான் 'எதற்காகப் புறப்பட்டோம்' என்ற நினைவே அவளுக்கு வந்தது.

ஆம்! பதக்கத்தை எடுக்க அவள் மறந்து விட்டாள்.

அதற்காக அவள் மீண்டும் இல்லத்துக்குள் திரும்பியபோது, அவளை ஆச்சரியமாகப் பார்த்தாள் ஜெபுன்னிஸா.

''என்ன, காற்று எங்கே புறப்பட்டிருக்கிறது?'' என்று கேட்டாள் அவள்.

'போனால் பார்த்து விடலாம்' என்ற நம்பிக்கை மட்டும் இருந்தது.

யானையின் துதிக்கையிலிருந்து மீண்ட போது, ஒரு நாள் முழுதும் அங்கே தங்கியிருந்த 'உரிமை' இருக்கிறது அல்லவா?

காவலர்களுக்கே அவளை அடையாளம் தெரியும்போது, கதவுகள் யாரையும் கேட்டுக் கொண்டு திறக்க வேண்டியதில்லையே?

அவள் ஏனோ மாலை நேரத்தைத் தேர்ந்தெடுத்தாள்.

தென்னங்கீற்றுக்களைத் தாலாட்டும் தென்றல், வஞ்சித் தெருக்களில் ஊஞ்சலாடிச் செல்லும்போது, தானும் அதிலே தவழ்ந்து செல்ல அவள் விரும்பினாள்.

ஜரிகை தைத்த ஒரு நீல நிற அங்கியை அவள் அணிந்து கொண்டாள்.

முழுக்கையும் தைக்கப்பட்ட அந்த அங்கி, அவள் அழகுக்கு மெருகூட்டியது.



காற்று ஒன்றுதானே துணை இல்லாமலும், தடையில்லாமலும் போகும். எங்கேயும் எப்போதும் நுழையக் கூடியது அது ஒன்றுதானே?

இப்போது அந்த ஜாடையைப் புரிந்துகொள்வது சலீமாவுக்குக் கடினமாக இல்லை. ஆனால் என்ன சொல்வது என்றும் புரியவில்லை. குத்தலாகவும், ஜாடையாகவும் திருப்பிச் சொல்லும் நிலையிலும் அவள் இல்லை.

'வெளியே போயிருந்த இவள் திடீரென்று ஏன் வந்து தொலைத்தாள்?' என்ற கோபமே தோன்றியது.

''நான் அரண்மனைக்குப் போய்ப் பதக்கத்தைக் கொடுத்து விட்டு வரப்போகிறேன்'' என்று உள்ளதை உள்ளபடி சொல்லி விட்டாள்.

வேறு எதைச் சொன்னாலும், அடுத்தடுத்துக் கேள்வி கேட்கும்போது, புதிய புதிய பொய்களைச் சொல்ல வேண்டுமே!

''அப்படியென்றால் நானும் வருகிறேன்'' என்றாள் ஜெபுன்னிஸா.

சலீமா அதை எதிர்பார்த்தவள் தானே?

மடமடவென்று மாடத்தில் ஏறிச் சென்று அவசரம் அவசரமாகப் பதக்கத்தை எடுத்துக் கொண்டு திரும்பினாள்.

ஏதோ ஒரு பெரிய காரியத்துக்குத் தடை நேர்ந்து விட்டது போல அவளுக்குத் தோன்றிற்று.

'அது என்ன காரியம்?' என்று கேட்டிருந்தால் அவள் விழித்திருப்பாள். 'புரிந்தும் புரியாத' நிலையல்லவா அது?

வேறு வழியின்றி ஜெபுன்னிஸாவை அழைத்துக் கொண்டு புறப்பட்டாள் சலீமா.

அவள் நினைத்தது போலவே அரண்மனைக் கதவுகள் அவளுக்காகத் திறந்தன.

முன்புற முற்றத்தில் அவர்களை அமரச் செய்தார்கள் காவலர்கள்.

உட்புறக் கதவுகளையே அசையாமல் பார்த்துக் கொண்டிருந்தாள் சலீமா.

'அந்தக்கதவுகள் திறக்க மாட்டாவா? அரசர் தன்னைக் காண மாட்டாரா?' என்பதே அவளது கவலையாக இருந்தது.

திரும்பத் திரும்பத் தன் ஆடைகளைச் சரிப்படுத்திக் கொண்டாள்.

அடிக்கடி பெருமையோடு ஜெபுன்னிஸாவைப் பார்த்தாள்.

கதவு திறக்கும் சத்தம் கேட்டபோது கரை காணாத மகிழ்ச்சியுடன் திரும்பிப் பார்த்தாள் சலீமா.

அங்கே நாராயண நம்பூதிரி வந்து கொண்டிருந்தார்.

இளஞ்சிட்டுக்களுக்கு ஓர் ஏமாற்றம். இரண்டும் எழுந்து நின்றன.

''என்ன செய்தி?'' என்றார் நாராயண நம்பூதிரி.

''மன்னரைக் காண வேண்டும்'' என்றாள் சலீமா.

இப்பொழுது அவள் ஜெபுன்னிஸாவைப் பேச விடவில்லை.

''என்னிடம் சொல்லுங்கள்'' என்றார் நாராயண நம்பூதிரி.



சலீமா ஜெபுன்னிஸாவைப் பார்த்தாள்.

நாராயண நம்பூதிரிக்குப் பழைய நினைவு கொஞ்சம் வந்தது.

ஆரம்பிக்க வானத்தில் எந்தப் பறவை பறந்தாலும், 'அது என்ன பறவை?' என்று கண்டுபிடித்துவிடக் கூடியவர் அல்லவா அவர்?

''இல்லை; மன்னரிடமே நேரில் சொல்ல வேண்டும்'' என்று துணிந்து சொல்லிவிட்டாள் சலீமா.

''அந்தரங்கமா? நான் அறியாமலா?'' என்று கேட்டார் நாராயண நம்பூதிரி.

சலீமா குழம்பினாள். 'யார் இந்தக் கிழவன், உயிரை வாங்குகிறானே' என்று அவளுக்கு ஆத்திரம் வேறு வந்தது.

''சின்னஞ் சிறிய பெண்கள் மன்னவரைப் பார்க்க வந்தால், எங்கள் நாட்டுத் தென்னை மரங்கள் கூடப் பயப்படும்'' என்று வேடிக்கையாகச் சிரித்துக்கொண்டே சொன்ன நாராயண நம்பூதிரி, ''நான் வேடிக்கைக்காகச் சொன்னேன்; மன்னவர் மற்றோர் அரண்மனையில் தங்கியிருக்கிறார். என்னிடம் சொல்லலாம் என்றால் சொல்லுங்கள். ஏதாயினும் தருவதாயிருந்தால் என்னிடம் தாருங்கள்'' என்றார் மேலும்.

''கொடுத்துவிடு! கொடுத்துவிடு!'' என்றாள் ஜெபுன்னிஸா.

சலீமாவுக்குக் கோபம் கோபமாக வந்தது.

கையிலிருந்த பதக்கத்தைக் காட்டி, ''அன்று மன்னவர் கழுத்திலிருந்து விவாத மண்டபத்தில் இது விழுந்து விட்டது. இதை அவரிடம் கொடுக்க வேண்டும்'' என்றாள்.

அமைதியாக அதைக் கையில் வாங்கி, அதைத் திறந்து பார்த்தார் நாராயண நம்பூதிரி.

அதிலே யூஜியானுவின் ஓவியம் இல்லை

ஞாபகமறதியாகத் தன் பதக்கத்தை எடுத்து வந்து விட்டாள் சலீமா.

மீண்டும் அமைதியாக அதை மூடிய நம்பூதிரி, அதை அவள் கையிலேயே கொடுத்து, ''இதை நீங்களே கொண்டு போய்க் கொடுங்கள். நகரை ஒட்டி ஒரு பழைய மாளிகை இருக்கிறது. முன்பு பூதப் பெண் தங்கிய மாளிகை. அங்கேதான் தங்கியிருக்கிறார் மன்னவர்'' என்று கூறிவிட்டு உள்ளே சென்று விட்டார்.

செல்லும் முன்பு சலீமாவின் முகத்தை நன்றாகத் தம் அகத்தில் பதிய வைத்துக் கொண்டார்.

சலீமாவுக்கு உயிர் வந்து ஒரு பெருமூச்சு விட்டாள்.

பின்பு இரண்டு கிளிகளும் அந்த மாளிகையை நோக்கிப் புறப்பட்டன.

மாளிகைக்குள் நுழையும்போதே, மன்னவர் பாடல் பாடிப் பூஜை செய்யும் சத்தம் சலீமாவுக்குக் கேட்டது. அது முடியும்வரையில் சலீமாவும் ஜெபுன்னிஸாவும் காத்திருந்தார்கள்.

பூஜை முடிந்து மன்னவர் முற்றத்துக்கு வந்தார். அங்கே ஒரு பௌர்ணமியும் அமாவாசையும் உட்கார்ந்திருப்பதைக் கண்டார்.

சலீமாவின் புதிய ஆடை அலங்காரம் புதிய தேவதையைப் போல் காட்டிற்று.

''பட்டத்து யானை மீண்டும் துரத்தவில்லையே?'' என்று சிரித்துக்கொண்டே கேட்டார் சேரமான்.

''இல்லை; அந்த யானை என் கண்களுக்குள்ளேயே நிற்கிறது. அதனால் தூக்கம் வரவில்லை'' என்றாள் சலீமா.

''நான் அதனிடம் சொல்லி வைத்திருக்கிறேன்; இனி அது உன்னைத் துரத்தாது'' என்றார் மன்னவர்.

மன்னவரின் திருமேனிக் கோலமும் புன்னகையும் சலீமாவைக் கவர்ந்தன.

''பெரிய அரண்மனைக்குப் போனோம். அங்கே ஒரு பெரியவர் இருந்தார். அவர்தான் இங்கே வரச் சொன்னார்'' என்றாள் சலீமா.

ஜெபுன்னிஸா அவள் காதருகே சென்று, ''உஷ்! அவர்தான் அமைச்சர் நாராயண நம்பூதிரி. மறந்துபோய் விட்டதா?'' என்றாள்.

சேரமான் சிரித்துக் கொண்டே, ''என்னைப் பார்க்க வந்ததன் நோக்கம்?'' என்றார்.

இரண்டுஅடி உயரமுள்ள சலவைக்கல் பட்டியல் மீது வலது காலைத் தூக்கி வைத்துத் தன் இரு முழங்கைகளையும் காலில் ஊன்றிய வண்ணம் அவர் கேள்வி கேட்ட பாணியே, சலீமாவுக்கு அழகாகத் தோன்றியது.

''அன்று விவாத மண்டபத்தில் இந்தப் பதக்கத்தை நீங்கள் தவறவிட்டு விட்டீர்கள்'' என்று சொல்லிக் கொண்டே தன் மார்பக ஆடைக்குள் இருந்த பதக்கத்தை எடுத்தாள் சலீமா.

அது அவளது கழுத்து மணி மாலையோடு பின்னிக் கொண்டு வெளியே வர மறுத்தது.

ஜெபுன்னிஸா இரண்டையும் பிரித்து விட்டாள்.

பதக்கத்தைக் கையில் வாங்கிய சேரமான், ''மிகவும் நன்றி. இது காணாமல் போய் விட்டதே என்று கலங்கினேன். இதை நான் உயிருக்கு உயிராக நேசிக்கிறேன்'' என்றார்.

சலீமா அப்போது பெருமூச்சு விட்டாள்.

பிறகு, ''அடிக்கடி உங்களோடு விவாதிக்க வேண்டும் போல் இருக்கிறது'' என்றும் கூறினாள்.

''எனக்கும் கூடத்தான். அந்த விவாத மண்டபத்தில் உங்கள் கேள்விகள்தான் பொருள் செறிந்து இருந்தன'' என்றார் சேரமான்.

''வாரம் ஒரு முறை என்பது மிகவும் குறைவாக இல்லையா?'' என்று கேட்டாள் சலீமா.

''ஏன்? நாளைக்கு வேண்டுமானாலும் வாருங்களேன்; கூட்டமில்லாமல் விவாதிக்கலாம்'' என்றார் சேரமான்.

''வருகிறோம், வருகிறோம்'' என்று தலையாட்டினாள் ஜெபுன்னிஸா. அவளை ஒருமாதிரியாகப் பார்த்தாள் சலீமா.

'நாளைக்குமா இந்தச் சங்கடம் கூட வரப் போகிறது?' என்று அவள் எண்ணிக் கொண்டாள்.

''வேறு ஏதாவது செய்தி?'' என்று கேட்டார் சேரமான்.

''இல்லை! நாளைக்கு வருகிறோம்'' என்றாள் சலீமா.

இருவரும் புறப்பட்டார்கள்.

பூதியானுவோடு துயில் கொண்ட தனியறைக்கு வந்த சேரமான், அவள் படுத்திருந்த கட்டிலைப் பார்த்தபடி, பதக்கத்தை முத்தமிட்டுத் திறந்தார்.

அதிலே இருந்தது — சலீமா !

(தொடரும்)

## ராஜா வேத பாடசாலை, கும்பகோணம் – வேண்டுகோள்

தஞ்சை நாயக சாம்ராஜ்யத்தில் எழுபத்தைந்து வருஷங்கள் பிரதம மந்திரியாயிருந்து கணக்கற்ற தர்மங்கள் செய்து அழியாப்புகழ் பெற்ற மகான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர், உலகம் ஸுபிக்ஷமாக வாழ வேதரக்ஷணம் இன்றியமையாதது என்ற உண்மையை மனத்தில் கொண்டு கும்பகோணம் காவேரி தீரத்தில் இப்புனிதமான வேத பாடசாலையை 1542-ம் வருஷம் நிறுவினார்கள்.

இடையறாது நடந்து வரும் இந்தப் பாடசாலையில் ரிக், யஜுஸ், ஸாம வேதங்களும், காவ்ய பாடங்களும், இங்கிலீஷ், தமிழ், கணக்கு, சரீரப் பயிற்சி முதலிய லௌகிக பாடங்களும் போதிக்கப்பட்டு வருகின்றன.

இப்போதுள்ள சூழ்நிலையில், பாடசாலையின் நில வருமானம் அறவே நின்று விட்டதால் ஸ்ரீ காஞ்சி பெரியவர்களின் ஆக்ஞைப்படி ''பிடி அரிசித் திட்டம்'' அமுலுக்குக் கொண்டு வரப்பட்டு வீடு வீடாய் அரிசி வசூல் செய்து குழந்தைகளுக்கு அன்னம் அளிக்கப்பட்டு வருகிறது. என்றாலும் நாளொன்றுக்கு ரூபாய் நூற்றைம்பது செலவு ஆகிறது. இதன் பணி நீடித்து நடைபெற 360 போஷக அங்கத்தினர்களைச் சேர்க்கத் திட்டமிடப்பட்டிருக்கிறது. அத்தகைய அங்கத்தினர்கள் ஓர் ஷெட்யூல்ட் பாங்கில் ரூ. 1,500 நிரந்தர முதலீடு செய்வார்களானால், அதன் வருஷ வட்டி ஒரு நாளையச் செலவுக்கு வரக்கூடும். அல்லது வருஷந்தோறும் ரூ. 150 அனுப்பி ஒரு குறிப்பிட்ட தினத்தின் செலவை அவர்கள் ஏற்றுக் கொள்ளலாம்.

வேதத்தை ரக்ஷிக்க நமது தேசத்தில் 360 உத்தமர்கள் நிச்சயம் கிடைப்பார்கள் என்பதில் ஐயமில்லை. அவர்கள் தொடர்புகொள்ள இதோ முகவரி: பிரஸிடெண்ட் — டிரஷரர், ராஜா வேத பாடசாலை, கும்பகோணம்—612001.





# தலைப்பில்லாத கதை!

மெய்யடியான்

முன் குறிப்பு: பெயர் வைக்கத் தெரியாததால் தலைப்பில்லாத கதை என்று நினைத்துவிட வேண்டாம். இது காரணப் பெயர். கதாநாயகி மாலுவும் — அதாவது மாலதியும்-அவளோடு கல்லூரியில் படிக்கும் மற்றப் பெண்களும் சேலையே கட்டுவதில்லை! அனர்த்தம் செய்து கொண்டு விடாதீர்கள். அவர்கள் அணிவதெல்லாம் பெல் பாட்ஸ், ஜீன்ஸ்தான். சேலைக்குத்தானே தலைப்பு இருக்கும். சேலையே இல்லாதபோது இது தலைப்பில்லாத கதைதானே!

**“ஏ**ய் மிஸ்டர்!''

''என் பெயர் பாஸ்கர்.''

''தெரியுமே! இதில் கையெழுத்து இருக்கிறதே.''

கடிதம் ஒன்றைக் கையிலேந்திப் பாஸ்கர் முகத்தருகே முன்னும் பின்னும் அசைத்தாள் மாலதி. அந்தக் கடிதம்—

''ஹா ... என் கடிதம். பார்த்தாயா மாலு?''

''பார்த்**தேன்**.''

''படித்தாயா கண்ணே!''

''படித்**தேன்**.''

''ரசித்தாயா ஸ்வீட்டி.''

''ரசித்**தேன்**.''

''ஹா... என் மகிழ்ச்சியை என்னென்று எடுத்தியம்புவேன். உன் வார்த்தையெல்லாம் தேனாய் இனிக்கின்றனவே. சம்மதம் என்கிற வார்த்தையையும் சொல்லி என்னை மகிழ்ச்சியின் எல்லைக்கு அழைத்துச் செல்லு, மாலு.''

''நீங்கள் தைரியசாலிதான்.''

''பாராட்டுக்கு என் நன்றி.''

''கையெழுத்துப் போட்டுக் காதல் கடிதம் எழுதியிருக்கிறீர்களே, உங்கள் தைரியமே, தைரியம்.''

''ரொம்ப சிம்பிள். கையெழுத்துப் போடாமல் இருந்தால் யார் எழுதியது என்று தெரியாமல் கஷ்டப்படுவாயே மாலு.''

''இப்போ கஷ்டமே இல்லை.''

''கண்ணே! டிஸ்கொதே போகலாமா?''

''ஏய் மிஸ்டர்.''

''பன்னீராய் இருந்த நீ வெந்நீராய் மாறுவதேனோ? ஹா... கோபத்திலும் உன் முகம்..''

''ஷட் அப். இதைப் பிரின்ஸிபாலிடம் கொடுக்கப் போகிறேன். உங்களைக் கூப்பிடுவார். டி. ஸி. கொடுப்பார். ஜம்மென்று வாங்கிக்கொண்டு, டிஸ்கொதே போங்கள்! காதல் கடிதமா எழுதுகிறீர்கள்?''

''ஹா! இன்பத்தின் எல்லையைக் காண நினைத்த எனக்குக் கல்லூரியின் எல்லையைக் காட்டுகிறாயே. இது முறையல்ல மாலு! உனக்கு எழுதப்பட்ட கடிதத்தை இன்னொருவருக்குக் கொடுப்பது நாகரிகம் அல்ல மாலு. கொஞ்சம் நில்லேன். நான் சொல்வதைக் கேளேன்.''

அவனைத் திரும்பிக் கூடப் பார்க்காமல் போயே போய்விட்டாள் மாலதி.

**பி**ரின்ஸிபால் சுந்தரவனச் சிங்கம்—அதாவது சுந்தரவதனம், முன்னது மாணவர்கள் வைத்த செல்லப் பெயர் — தம் ஆசனத்தில் அமர்ந்திருக்க, அவர் எதிரே கேள்விக் குறியாய் நின்றான் பாஸ்கர்.

'பெண்ணாய், அதிலும் அழகான கல்லூரிப் பெண்ணாய் இருந்தால் காதல் கடிதம் எழுதாமல் எப்படி இருக்க முடியும்? கல்லூரியில் படித்து என்ன பிரயோஜனம்? வருகிற கடிதங்களை அழகாய் இன்டக்ஸ் போட்டு ஃபைல் பண்ணி வைக்கிற நாட்களில் இப்படிப் பெரிதாய் எடுத்துக் கொண்டு ரிப்போர்ட் பண்ணி விட்டாளே!' மனத்திற்குள் பொருமியபடி நின்றான் பாஸ்கர்.

கேள்விகளைப் பிரின்ஸிபால் கேட்டார்.

''எழுதினாயா?''

மௌனம்.

''எழுதினாயா?'' சற்று உரக்கக் கேட்டதும் கல்லூரிக் கட்டிடமே அதிர்ந்தது. அதற்குக் காரணம் சத்தம் மட்டுமல்ல. கட்டிடம் டெண்டர் கோரிக் கட்டப்பட்டது!

''எழுதினேன் சார்.''

''ஏன் எழுதினாய்?''

''ஆசை சார்.''

''என்ன தண்டனை தெரியுமா?''

''டி. ஸி. கொடுக்காதீர்கள் சார்!''

''டி. ஸி. கொடுப்பது அப்புறம். ஜெயிலுக்குப் போக வேண்டியிருக்கும்.''

''இதற்கு ஏன் சார் ஜெயில், கியில் என்று.. எனக்குப் பயமாயிருக்கு சார்.''

''நக்ஸலைட் வாசகங்களை எழுத மட்டும் பயமில்லையா?''

மாலதியை ஸ்பரிசித்த மாதிரி துள்ளினான் பாஸ்கர். ''ஸார்..! ஸார்..! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?''

''கல்லூரியின் காம்பவுண்டுச் சுவரில் நக்ஸலைட் வாசகங்களை எழுதினாய் என்கிறேன். போலீஸ் வரப் போகிறது என்கிறேன். கைது பண்ணப் போகிறார்கள் என்கிறேன்... என்கிறேன்... கிறேன்.... போதுமா?''

''ஸார்..! ஸார்...! நான் அதை எழுதவேயில்லை ஸார்.''

''பையா! எனக்கு என் பெற்றோர் காது குத்திவிட்டார்கள். நீ எதற்கு வீணே முயல்கிறாய். சற்று முன்னால் ஒப்புக்கொண்டுவிட்டு இப்போது மறுத்தால் அதை நம்ப நான் என்ன காதில் பூ வைத்தவனா என்ன ?''

''நான் எழுதினேன் என்று சொன்னது இதில்லை சார்.''

''வேறு என்ன எழுதினாய்?''

''அது... அது... என்னை நம்புங்கள் சார். நான் அதை எழுதவேயில்லை சார்.''

''ஒப்புக்கொண்ட ஒன்றை மறுக்காதே. போனால் போகிறதென்று இருபத்தி நாலு மணி நேரம் டைம் தருகிறேன். எழுதியவனைக் கொண்டுவா. இல்லாவிட்டால் நீதான் எழுதினாய்.''

பாஸ்கர் வெளியேறினான்.

"**மா**லதி! மிஸ் மாலதி!"

பாஸ்கரின் குரல் கேட்டுத் திரும்பினாள்.

"என்னைச் சுற்றுவதை இன்னும் விடவில்லையா?"

"என் கடிதத்தைத் திருப்பிக் கொடுத்து விடு. சுற்றாமல் விட்டு விடுகிறேன்."

"பிரின்ஸிபாலிடம்தான் தரப் போகிறேன்."

"அதையாவது செய்."

"என்ன! பயமேயில்லையா?"

"இல்லை!"

"டி. ஸி.யைக் கொடுத்து விடுவார்."

"மாட்டார்."

"மிஸ்டர்! மூளையை உபயோகித்துப் பேசுங்கள்."

"மூளையை உபயோகித்ததால்தான் சொல்கிறேன்."

"காதல் கடிதம் எழுதுவது எத்தனை பெரிய தப்பு தெரியுமா?"

"நக்ஸலைட் வாசகங்களை எழுதுவதை விடச் சின்னதுதான்."

"என்ன சொல்கிறீர்கள்?"

"அதாவது—"

சடக்கென்று நிறுத்தினான் பாஸ்கர். தூரத்தில் மாலதியின் தம்பி ரங்கு போய்க்கொண்டிருப்பது தெரிந்தது. பாஸ்கரின் முகத்தில் மகிழ்ச்சி.

"அதோ உன் தம்பி போகிறானே, அவனைக் கூப்பிடேன்."

"அவன் எதற்கு?"

"கூப்பிடேன்."

ஏதும் புரியாத நிலையில் தயக்கத்தோடு அவனை அழைத்தாள் மாலதி.

"என்ன மாலு?" என்றவாறே ஓடி வந்த ரங்கு பாஸ்கரைப் பார்த்ததும் பேயறைந்தாற்போல் நின்றான்.

"எங்கே போகிறான் என்று கேள் மாலு."

"சேம் சைட் கோல் போடாதே, பாஸ்கர்!" என்று அழுதான் ரங்கு.

"கேள் மாலு."

பாஸ்கரின் அழுத்தமும் ரங்குவின் அழுகையும் மாலதியின் மனத்தில் பயத்தை உண்டாக்கின.

"எங்கே போகிறாய் ரங்கு?"

"எங்கேயுமில்லை."

"பொய் சொல்கிறான்." பாஸ்கர் இடையில் புகுந்தான்.

"நிஜத்தைச் சொல்."

"எங்கேயுமில்லேன்னு சொல்கிறேனே."

"நான் சொல்லட்டுமா?" பாஸ்கர் பயமுறுத்தினான்.

"வேண்டாம்டா."

"அப்படியானால் நீயே சொல்."

"மாலு... மாலு... அப்பாவிடம் சொல்ல மாட்டியே."

"மாட்டாள்" என்று அபயம் அளித்தான் பாஸ்கர்.

"வந்து....வந்து..."

"உம்..."

"டிஸ்கொதே போகிறேன்."

"வாட் டு யூ மீன்? டிஸ்கொதேயா? யாரோடு?"

"என் கேர்ள் ஃபிரண்டோடு."

"ஏதுடா பணம்?"

"வந்து...வந்து..."

"அவன் சொல்ல மாட்டான் மாலு. பிரின்ஸிபாலிடம் போனால் தன்னால் சொல்லி விடுவான்."





# சரித்திர சிப்ஸ்!

■ முகமது—பின் துக்ளக்கின் தகப்பனார் கியாஸ்-தீன் துக்ளக் வங்கத்தில் ஏற்பட்டிருந்த கலவரத்தை அடக்கி விட்டுத் திரும்புகையில் அவரை வரவேற்க யமுனை ஆற்றங்கரையில் முகமது துக்ளக் வரவேற்பு மண்டபம் ஒன்றைச் சதித் திட்டத்துடன் அமைத்திருந்தார். கியாஸ்-தீன் வந்து அதில் தங்கினார். அன்று மாலை தொழுகையின் போது முன்னேற்பாட்டின் படி அந்த மண்டபம் நொறுங்கி விழுந்தது. கியாஸ்-தீன் தன் இளைய மகன் உடலின் மீது இடிபாடுகள் விழாதபடி தடுக்கும்நோக்கத்துடன் கவிழ்ந்து கொண்டிருந்த வண்ணம் இறந்து கிடந்தார். ஆனால் அவரது இளைய மகனும் அவருடன் இறந்து பட்டார்.

■ முறையின்றி உழவர்களிடமிருந்து பொருள் பெறுவதை ஷெர்ஷா விரும்பவில்லை. 'வரி போடத் திட்டம் செய்யும் காலத்தில் உழவரிடம் அன்பு காட்டுங்கள். ஆனால் வரி வசூல் செய்யும் போது அவர்களிடம் வீண் அன்பு காட்டாதீர்கள்' என்பது ஷெர்ஷாவின் ஆணை. ஷெர்ஷா போர் வீரர்களைத் தானே நேரில் தேர்ந்தெடுத்தார். அவர்களுக்குரிய ஊதியத்தைத் தாமே நேரில் கொடுத்து வந்தார். அவர் பதவி யேற்ற போது நாணய முறைகளில் குழப்பங்கள் மலிந்து காணப்பட்டன. அவற்றைப் போக்கி 178 குன்றிமணி அளவு எடையுள்ள வெள்ளி ரூபாய் நாணயத்தை வெளியிட்டார்.

■ கிரேக்க ரோம நாடுகளுடன் தமிழர்கள் கொண்டிருந்த வாணிகத் தொடர்பை ஸ்டிராபோ, பிளினி, தாலமி ஆகியோரின் குறிப்புகளிருந்து அறிகிறோம். அரசி லோலியா பௌலினு என்பவள் ஒரு திருமண விழாவில் 400 லட்சம் செஸ்டர்கள் மதிப்புள்ள முத்து மாலைகளையும் மணி மாலைகளையும் அணிந்திருந்தாள் என்று கூறப்படுகிறது. நீரோவின் செருப்புகளில் இந்திய முத்துக்கள் பதிக்கப்பட்டிருந்தன. செனிகா, என்பவர் தந்தத்தினால் செய்யப்பட்ட கால்களுடைய 500 மேஜைகளை வைத்திருந்தார்.

- லலிதா நாராயணன்

---

''வேண்டாண்டா, இங்கேயே சொல்லிட றேன்.''

''சீக்கிரம் சொல்.''

''ரெண்டு பேர் கொடுத்தாங்க.''

''யார் அந்த ரெண்டு பேர்?''

''தெரியாது.''

''ஏன் கொடுத்தாங்க?''

''நக்சலைட் வாசகங்களை எழுதிறியான்னு கேட்டாங்க. சரின்னேன். கொடுத்தாங்க.''

''நீ ஒரு நக்சலைட்.''

''டேய், அப்படியெல்லாம் சொல்லிப் பயமுறுத்தாதேடா. என் கேர்ள் ஃபிரண்ட், 'நீ ஓர் ஆம்பிளையா யிருந்தா என்னை டிஸ்கொதே கூட்டிண்டு போகணும்'னு சொல்லிட்டா. எங்கப்பா கொடுக்கிற பாக்கெட் மணி டாக்ஸிக்குக்கூடப் பத்தாது. அதனாலே தான் இப்படிப் பண்ணினேன். டேய், பாஸ்கர், என்னை எப்படியாவது காப்பாத்துடா. கேர்ள் ஃபிரெண்ட், டிஸ்கொதே எதுவுமே வேண்டாண்டா.''

''அந்த ரெண்டு பேர் எங்கே இருக்காங்கன்னு தெரியுமா?''

''தெரியாது. ஆனால் இன்னிக்குச் சாயங்திரம் மவுண்ட்ரோட் போஸ்டாபீஸிலே சந்திக்கிறதாச் சொல்லி யிருக்காங்க. இன்னும் என்னென்னமோ எழுதணுமாம். எழுதினா ஜாஸ்தி பணம் தரேன்னு சொல்லி யிருக்காங்க.''

''மாலு, என் கடிதத்தைக் கொடுத்துவிடு. இல்லாட்டா இவன்தான் அதை எழுதினான்னு பிரின்ஸிபாலிடம் சொல்லி விடுவேன்.''

''கடிதம், கடிதம்... அவ்வளவுதானா? ரங்குவைக் காப்பாற்ற வழி என்ன பாஸ்கர்?''

''ஒரு வழி இருக்கிறது.''

''நீ சொல்றபடி கேட்கிறேண்டா என்னைக் காப்பாத்துடா.''

''அப்படியானா என்னோடு வா. நீயும் வா, மாலு.''

**கா**லைப் பத்திரிகையில் வெளியான செய்தி:

பயங்கர நக்சலைட்டுகள் கைது.

கல்லூரி மாணவரின் சாகசம்.

சென்னை: ஆக. 8— பல காலமாய்த் தலைமறைவாய் இருந்துகொண்டு போலீஸாருக்கு டிமிக்கி கொடுத்து வந்த இரண்டு பயங்கரமான நக்சலைட்டுகளைப் போலீஸார் இன்று மௌண்ட்ரோட் தபால் நிலையம் அருகே கைது செய்தார்கள்.

இது பற்றிப் போலீஸ் கமிஷனர் கொடுத்த செய்தியின் விவரம் (பாஸ்கர் கூறியபடி) வருமாறு:

கைதான இருவர் பாஸ்கர் என்கிற கல்லூரி மாணவரை அணுகி, நக்சலைட் வாசகங்களை எழுதும்படி கேட்டுக் கொண்டனராம். அவர்களுடைய நம்பிக்கையைப் பெறுவதற்காக மேற்படி மாணவர் அவர்கள் தந்த பணத்தைப் பெற்றுக் கொண்டு தன் கல்லூரிக் காம்பவுண்ட் சுவரில் பயங்கர வாசகங்களை எழுதினாராம்.

பாஸ்கரின் மேல் நம்பிக்கை ஏற்பட்டவுடன் அவரை மேலும் பயன்படுத்திக் கொள்ள நினைத்த நக்சலைட்டுகள் அவரை மவுண்ட் ரோடு தபால் நிலையத்தருகே வரச் சொல்லி யிருந்தார்கள்.

தேசப் பற்று மிருந்த மாணவர் பாஸ்கர் ரகசியமாகப் போலீஸாருக்குச் சொல்லிவிட்டு அவர்கள் சொற்படி, தன் நண்பர்கள் ரங்கு மாலதி இருவருடனும் அங்கு சென்றார்.

அவரைச் சந்தித்த நக்சலைட்டுகள் இருவரையும் போலீசார் திடீரென்று வளைத்துப் பிடித்தனர். தேசத் தொண்டு புரிந்த பாஸ்கருக்கு அரசாங்கப் பரிசு சிபாரிசு செய்யப்பட்டுள்ளது.

படத்தில் இருப்பது பாஸ்கருடன் சென்ற இளம் கல்லூரி மாணவி மாலதி. —த.நி.

**''மா**லு!''

''என்ன பாஸ்கர்?''

''கடிதத்தை இன்னும் தரவில்லையே.''

''தரத்தான் வேண்டுமா?''

''பிரின்ஸிபாலும், டி. வி.யும் கனவிலே அடிக்கடி....''

''நான் வருவதில்லையா பாஸ்கர்?'' மாலதி சிணுங்கினாள்.

''மாலு...''

''டிஸ்கொதே போகலாமா?''

பாஸ்கர் மயங்கினாற்போல் அவள் மேல் சாய்ந்து அணைத்துக் கொள்ள அவள் பொய்க் கோபத்தில் அவனை முறைத்தாள்!

# திக்! திக்! திக்! திக்!

போலீசுக்குச் சவாலாக இருக்கிறான் கொலைகாரன். யார், எப்படிக் கொலை செய்கிறான் என்பதை அறிய முடியாமல் திணறும் போலீசுக்குக் கொலைகாரன் தானே தன்னுடைய புகைப்படத்தை பகுதி பகுதியாக அனுப்பி வைக்கிறான். அதுமட்டுமா? அடுத்த கொலை இப்படி இன்ன மாதிரியாகச் செய்யப் போகிறேன் என்பதைக் கூடப் போலீசுக்கு அறிவிக்கிறான். மிகவும் தந்திரசாலியான கொலைகாரனைப் பிடிக்கவும் முடியவில்லை; அவன் செய்யவிருக்கும் அடுத்த கொலையைத் தடுக்கவும் முடியவில்லை போலீசினால். எத்தனை முயற்சிகள், எவ்வளவு கண்ணிகள் — அத்தனையிலும் கண்ணில் மண்ணைத் தூவி விட்டுத் தப்பி விடுகிறான் கறுப்புக் கண்ணாடி யணிந்த அந்தக் கொலைகாரன்.

அவன் குரலோ—இனிமை. பத்திரிகைகளாலும் பொது மக்களாலும் திறமையின்மைக்காக ஏசப்பட்ட போலீசின் அருகிலேயே அவர்கள் சந்தேகம் கொள்ளாத வகையில் உலவுகிறான் இந்த அதிசயக் கொலைகாரன்.

அந்திக்கு முடிவு உண்டே. ஜீன் பால் பெல்மாண்டோ திறமைமிக்க போலீஸ் அதிகாரியாக வருகிறார். கொலைகாரன் அவருடைய விரல் நுனி வரைக்கும் வந்து தப்பும் கட்டங்கள் ரசிகர்களை இருக்கைகளின் விளிம்புக்குக் கொண்டு வருகின்றன. ஏன் சில வேளைகளில் எழுந்திருந்து நிற்கவும் வைத்து விடுகின்றன. படத்தின் ஆரம்பத்திலிருந்து முடிவு வரை திகில் தான்.

கொலையாளியின் கறுப்புக் கண்ணாடிக்குப் பின்னே உள்ள கண்களுள் ஒன்று கண்ணாடிக் கண் என்பதைத் தற்செயலாக அறியும் இடமும், டேப் செய்த டெலிபோன் பேச்சுக்களை போட்டுப் போட்டு அவன் குரலைக் கண்டு பிடிப்பதும் துப்பறியும் கலையின் உச்ச கட்டங்கள்.

பதினேழாவது மாடியில் ஒரு குடும்பத்தையே தன் துப்பாக்கி முனையில் வைத்துக் கொண்டு போலீசுக்குச் சவால் விடுகிறான் கொலைகாரன். பல மாடிக் கட்டிடத்தை 'டைம் பாம்' வைத்துத் தகர்க்கப் போவதாக அறிவிக்கிறான். நட்ட நடுநகரில் நெடுதுயர்ந்து நிற்கும் அவ்வளவு பெரிய கட்டிடமும் அதிலுள்ள உயிர்களும் எப்படிக் காப்பாற்றப்படுகின்றன? கொலைகாரனைக் கதாநாயகன் வளைத்துப் பிடிக்கும் அந்த சாகஸம் படத்தின் உச்சகட்டம். அதை நேரில் பார்த்து ரசித்துத்தான் திலைடைய முடியும். பிலிம் டைரக்டர்ஸ் கார்ப்பரேஷன் வழங்கும் படங்களில் தரமானது இந்த 'ஃபியர் ஓவர் த ஸிடி' என்ற படம். காமிரா மேனும் டைரக்டரும் பிரமாதப்படுத்தி இருக்கிறார்கள்.

— கௌசிகன்



"மாதரி! நான் சொல்வதைக் கேள். இம்மங்கையின் கணவனுடைய தந்தை இன்னு ரென்று மதுரையிலுள்ள வணிகர் அறிந்தால், பெறுதற்கரிய செல்வத்தினைப் பெற்றவர் போல இவளையும், இவள் கணவனையும் விருந்தினராக ஏற்றுக் கொண்டு, தங்கள் பெரிய மாளிகையிலே தங்க வைத்து உபசரிப்பார்கள். அதுவரை இடைக்குல மடந்தை யான உன்னிடம் மண்ணக மாதர் போற்றும் பெண்ணணங்கான கண்ணகியை அடைக்கல மாகத் தந்துள்ளேன். பாதுகாப்பாயாக!"

இவ்விதம் கூறி மாதரியிடம் கண்ணகியை அடைக்கலம் தரும் கவுந்தி அப் பெண்ணரசியை உபசரிக்க வேண்டிய வழிமுறைகளையும் விவரிக்கின்றாள்.

"மங்கல மடந்தையை நன்னீராட்டி,
செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் தீட்டி



தேமென் கூந்தல் சின்மலர் பெய்து,
தூமடி உடீஇத் தொல்லோர் சிறப்பின்
ஆயமும் காவலும் ஆயிழை தனக்குத்
தாயும் நீயே ஆகித் தாங்கு..."

என்பது மாதரிக்குக் கவுந்தியடிகள் கூறும் அறிவுரை. புகார் நகரில் கணவனைப் பிரிந்தவளாக இருந்த போது, அணிகலன்களையும் அலங்காரங்களையும் துறந்து, துயரமே குடி கொண்ட நிலையில் கண்ணகி வாழ்ந்தாளாதலாலும், கணவன் தன்னையடைந்த பின்னரும் அவனுடன் ஒன்றிரு நாள்கூடத் தன் வீட்டில் வாழ்க்கை நடத்தாமல், அவனைக் கைப்பிடித்து, ஒரு மாத காலம் வழி நடந்து அல்லலுற்றவளாதலாலும், அவளை நீராட்டி, அவளுடைய கண்களுக்கு அஞ்சனம் தீட்டி இயற்கை மணம் பெற்றுள்ள அவளது கூந்தலிலே மலர்களைச் சூட்டி, அழகிய தூய ஆடைகளை உடுப்பித்து, அவளுடைய தாயாகவே தன்னைப் பாவித்து, அவளைக் காப்பாற்றுமாறு கவுந்தி கூறுகின்றாள்.

புகாரை விட்டுப் புறப்பட்ட பின்னர், வழி நடையின்போது கண்ணகி அடைந்த துன்பத்தைப் பெண் துறவியான கவுந்தி சிலம்பைப் படிப்போருடைய மனங்களையெல்லாம் உருக்கி விடும் வகையில் வருணிக்கின்றாள்:

"கடுங்கதிர் வெம்மையும் காதலன் தனக்கு
நடுங்கு துயர் எய்தி, நாப்புலர வாடி
தன்துயர் காணாத் தகைசால் பூங்கொடி."

தன் கணவனுடைய துயரைத் துடைப்பதையே தொண்டாகக் கருதி, தன் துயர் பற்றிச் சிந்திக்காதவளாகி, அவனைப் பின் தொடர்ந்து பாலைவனங்களிலே நா உலர வழி நடந்தாள் கண்ணகி என்கிறாள் கவுந்தி.

கண்ணகியின் கற்புத் திறத்தைக் கவுந்தியடிகள் வருணிப்பதைப் பார்ப்போம்:

"கற்புக் கடம்பூண்ட இத்
தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம்
யாம் கண் டிலமால்;
வானம் பொய்யாது;
வளம் பிழைப்பு அறியாது:
நீள்நில வேந்தர்
கொற்றம் சிதையாது;
பத்தினிப் பெண்டிர்
இருந்த நாடு; என்னும்
அத்தகு நல்லுரை
அறியா யோ நீ"

# சிலம்புச் செல்வம்

## ம. பொ. சி

"கற்புக் கடம் பூண்ட இத் தெய்வம் அல்லது பொற்புடைத் தெய்வம் யாம் கண்டிலமால்" என்று பெருமிதத்துடன் கூறுகின்றாள். இதன் மூலமும் கண்ணகியான் மண்ணக மாந்தர்க்குத் தெய்வமாகப்போகும் செய்தியை முன்கூட்டியே வழங்குகின்றார் இளங்கோ. ஏற்கனவே "வேட்டுவ வரி"யில் சாலினித் தெய்வமானவள், கூறியதையும் கேட்டு விட்டோம் அல்லவா?

"தவத்தோர் அடைக்கலம்
தான்சிறிது ஆயினும்
மிகப் பேரின்பம் தரும்"

என்றும் கூறி, தெய்வக் கற்பினளான கண்ணகியை அடைக்கலம் பெறுவதால், பேரின்ப வீட்டை மாதரி பெறக் கூடும் என்பதையும் கவுந்தி மறைமுகமாகச் சொல்லி மாதரிக்கு விடை கொடுத்து அனுப்பினாள்.

புகாரிலே கண்ணகியும் கோவலனும் தொடங்கிய பாத யாத்திரையானது இத்துடன் முடிகிறது. இந்தப் பாத யாத்திரையிலே வழித் துணையாகக் கலந்து கொண்ட கவுந்தியடிகளுடைய தொடர்பும் இங்கேயே முடிந்து விடுகிறது. (தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

# க்ராக்ஜாக் 'ருசிப் போர்'

தித்திப்பே இது!

இல்லே, உப்புதான்!

## சரி, சரி... இரண்டும் சரியே

# பார்லே க்ராக்ஜாக்

## பிஸ்கட்டுகள்

## அனுபவம் புதுமை ரசித்திடும் கணமே!




everest/700/PP-tm.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசியா காசு